ஸ்ரீ

ஸ்ரீமதே நிகமாந்த மஹா தேசிகாய நம:

# ஸ்ரீமத் வேதாந்த தேசிகர்

அருளிச்செய்த 1972

# தேசிகப்ரபந்தம்



காரப்பங்காடு

வித்வான் கோபாலாசாரியர் மாணுக்கராகிய

தமிழ்ப்பண்டிதர்

T. C. பார்த்தசாரதி அய்யங்காரால்

பரிசோதிக்கப்பட்டு



சென்னை:

பூமகள்விலாச அச்சுக்கூடத்தில்

பதிப்பிக்கப்பெற்றது.

1936

இதன் விலை அணு-10

ஸ்ரீ

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

ஸ்ரீமதே வேதாந்த குரவே நம:

# ப்ரபந்தாநுஸந்தாந தீபிகை

[illegible] ஸந்தாந:।
[illegible]॥௧॥
ஸத்ப்ரபந்தாநுஸந்தாநதீபிகேயம் ப்ரகாஶ்யதே।
[illegible]॥௨॥
[illegible]।
[illegible]॥௩॥

ஸ்ரீய:பதியாய், பரமகாருணிகனாய், ஸர்வசக்தனாய், ஆஸ்ரித பலப்ரதனாய், ஸத்ய ஸங்கல்பனுமான எம்பெருமான் தந்தேவி பூஷணாயுத பரிஜனங்களைப் பொய்கையாழ்வார் முதலாகத் திருமங்கையாழ்வார் அளவாக உள்ள ஆழ்வார்களாகவும், நாதமுநிகள் முதலாக வேதாந்ததேசிகர் அளவாகவுள்ள ஆசாரியர்களாகவும், அவதரிப்பித்து அவர்களைக்கொண்டு அருளிச்செயல்களையும், அவைகளின் வ்யாக்யானங்களையும் ப்ரவர்த்திப்பித்துச் சேதனர்கள் ஸதாசார்ய கடாக்ஷத்தாலே பிராட்டியும் தாமுமான இருவர்களுடைய சேர்த்தியாகிற ஈஸ்வர தத்துவத்தையும், அவ்விருவர்களுக்கும் அடிமைப்பட்டிருக்கிற ஜீவதத்துவத்தையும், இவ்விரண்டு தத்துவங்களுடைய ஸ்வரூபத்தை அறியவொட்டாமற் பண்ணுகிற ப்ரக்ருதியையும் அறிந்து ப்ரபத்தியாலே பிரகிருதி ஸம்பந்தத்தைப்போக்கித் தம்மிருவர்களுடைய கைங்கரியமாகிற புருஷார்த்தத்தை அடைந்து உஜ்ஜீவிக்கும்படி செய்வித்து ஸந்துஷ்டனானான்.

இவைகளின் விரிவைக் கலியனருள்பாடு, ப்ரபந்தநிர்வாஹம், பன்னீராயிரப்படி, மூவாயிரப்படி, குருபரம்பராப்ரபாவம், நாலாயிரத் தனியன் வ்யாக்கியானம் ஆகிய இவைகளிற் பரக்கக் கண்டுகொள்க.

இவைகளை நிர்வஹித்தபடி எங்ஙனே யென்னில், முன்பு எம்பெருமான், பிராட்டி இவ்விருவர்களாலும் நியமிக்கப்பட்ட சேனை முதலியார் திருக்குருகையில் எழுந்தருளி, நம்மாழ்வாருக்குத் திருவிலச்சினை முதலானவைகளைப் பிறர்கண் படாமல் ப்ரஸாதிக்க, அவ்வாழ்வாரும் திருப்புளியாழ்வாரடியில் எழுந்தருளியிருக்கும்போது மதுரகவிகள் வந்து ஆச்ரயிக்க, திருவிருத்தம், திருவாசிரியம், பெரிய திருவந்தாதி, திருவாய்மொழி இவைகளைச்செய்தருளி, அவைகளையும், மற்றுமுள்ள விசேஷார்த்தங்களையும் அவருக்கு ப்ரஸாதித்தருள, அம்மதுரகவிகளும், அவைகளைப்பெற்று நம்மாழ்வார் திருநாட்டுக்கெழுந்தருளியபோது அத்திருநகரியில் அவ்வாழ்வாரை அர்ச்சையாக எழுந்தருளப்பண்ணுவித்து ஆராதித்து வந்தார்.

பின்பு, திருமங்கையாழ்வார் திருவரங்கம் பெரியகோயிலில் ஒருதிருக்கார்த்திகை மஹோத்ஸவத்தில் பெருமாளும், நாச்சிமாரும் திருமஞ்சனங்கண்டருளி நிற்க, அப்போது நம்மாழ்வார் அருளிச்செய்த திருவாய்மொழிக்கு வேதஸாம்யமும் ப்ரஸாதித்துத் திருநகரியில்நின்றும் அவ்வாழ்வாரை இக்கோயிலிலே எழுந்தருளப்பண்ணுவித்து அவ்வருளிச்செயல்களைத் திருச்செவிசாத்தி யருளவேண்டுமென்று ப்ரார்த்திக்க, அழகியமணவாளனும் அப்படியே திருவுள்ளம்பற்றியருள, அவ்வாழ்வாரைத் திருநகரியினின்றும் கோயிலுக்கெழுந்தருளப் பண்ணுவித்து வேதபாராயணத்தைக் கேட்டருள வேண்டிய மார்கழி சுக்ல ஏகாதசிமுதல் பத்துநாள்வரைக்கும் காலையில் வேதத்தையும், மாலையில் திருவாய்மொழியில் ஒருபத்தையும் அநுஸந்திக்கும்படியாகவும், முடிவில் ஆழ்வார் பெருமான்திருவடியைத் தொழும்படியாகவும் செய்வித்து அநந்தரம், லோகஸம்ரக்ஷணார்த்தமாக ஆழ்வாரை ப்ரஸாதித்தருளவேண்டுமென்று ப்ரார்த்திக்கப் பெருமாளும் அப்படியே ப்ரஸாதித்தருளி, இவ்வாறே பிரதிஸம்வத்ஸரமும் நடக்கவேண்டியதென்று நியமிக்கத் திருமங்கையாழ்வாரும் அந்நியமனப்படி நடப்பித்தருளிவந்தார்.

பின்பு, ஸ்ரீமந்நாதமுநிகள் திருக்குடந்தை எம்பெருமான்விஷயமான "ஆராவமுதே" என்கிற பத்துப்பாட்டுகளைமாத்திரம் அதிகரித்து மற்றவை லுப்தங்களாக விருந்தமையால் அவைகளை நம்மாழ்வாரிடத்தில் யோகதசையில்பெற்றுத் தாம் அவைகளை முதலாயிரம், திருமொழியாயிரம், திருவாய்மொழியாயிரம், இயற்பாவாயிரம் என்று நான்குபிரிவாகப் பிரித்துத் திருநகரியினின்றும் அவ்வாழ்வாரை முன்போலவே கோயிலுக்கெழுந்தருளப்பண்ணுவித்து அப்

பிரபந்தங்களில் முதலாயிரம், திருமொழியாயிரம் இவைகளை மார்கழி சுக்ல ஏகாதசிக்குமுன் பத்துநாள்களில் அநுஸந்திக்கும்படிக்கும், ஏகாதசிமுதல் பின்பத்துநாள்களில் திருமங்கையாழ்வார் நியமனப்படி வேதபாராயணத்தோடு திருவாய்மொழியையும், அதற்குப் பின்பு ஒருநாளில் இயற்பாவாயிரத்தையும் அநுஸந்திக்கும்படிக்கு இப்படியே ப்ரதிஸம்வத்ஸரமும் நடப்பிக்கும்படி நியமித்து மார்கழித் திங்கள்முதல் முடியுமளவுந் திருப்பள்ளியெழுச்சியையும், திருப்பாவையில் ஒருபாட்டையும், பின்பு திருப்பள்ளியெழுச்சியையும், திருப்பாவையையும் நித்யமாகக் காலையிலும் திருப்பல்லாண்டு, பூச்சூட்டல், காப்பிடல், சென்னியோங்கு, அமலனாதிபிரான், கண்ணிநுண்சிறுத்தாம்பு, அந்த திவ்யதேசவிஷயங்களான திருமொழி, திருவாய்மொழிகளையும், மாலையிலும் அழகியமணவாளன் திருவீதி அலங்கரிக்கும்போது திருவாய்மொழியொழிந்த மற்ற மூவாயிரங்களில் ஏதேனுமொரு ப்ரபந்தத்தையும், ப்ரம்மோத்ஸவத்தில் பத்தாம் திருநாளில் ஸ்ரீபுஷ்பயாகத்தில் திருவாய்மொழியையும் அநுஸந்திக்கும்படிக்கு நியமித்தருளி, இவைகளுக்கெல்லாம் நம்மாராவமுதனாலே அபிவிர்த்தியானதென்று செல்வமல்கு தென்திருக்குடந்தையில்மாத்திரம் மார்கழிமாஸம் முதல்தேதிமுதல் இருபத்தொருநாளில் இவ்வுத்ஸவத்தை அவ்விடத்தில் நம்மாழ்வாரைத் திருப்பிரதிஷ்டை செய்வித்து ப்ரதிஸம்வத்ஸரமும் நடக்கும்படிச் செய்வித்தருமன்றி அவ்வெம்பெருமானுக்கு ஆராவமுதாழ்வான் என்று திருநாமமுஞ்சாத்தி, ஸ்ரீவைஷ்ணவர்கள் விவாஹோத்ஸவத்தில் "வாரணமாயிரம்" என்கிற திருமொழியைக்கொண்டு வலந்தோத்ஸவமான சீர்பாடலையும், ஒருவர் திருநாட்டுக்கெழுந்தருளினால் அவருக்குத் திருப்பல்லாண்டு, கண்ணிநுண்சிறுத்தாம்பு, சூழ்விசும்பணிமுகில், முனியேநான்முகனே இவைகளை அநுஸந்தித்துத் திருவிருத்தத்தைக்கொண்டு பிரம்மரதம் நடத்தும்படிக்கும், இதற்கு ஸ்ரீசூர்ணபரிபாலனமென்கிற திருநாமமென்றும் நியமித்தருளி, தைப்பூர்ணிமையில் வேதத்துக்கு உத்ஸர்ஜநம்போலே திவ்யப்ரபந்தங்களைத் திருக்கார்த்திகையில் சாத்து செய்து திருவத்யயநோத்ஸவம் நடந்தபின் வேதத்துக்கு உபாகர்மம்போல் திருப்பல்லாண்டு தொடக்கஞ்செய்து ப்ரபந்தங்களை அநுஸந்திக்கும்படிக்கும் நியமித்தருளினர்.

பின்பு, எம்பெருமானார் திக்விஜயம் செய்தருளிக்கொண்டிருக்கும்போது சோழனுடைய உபத்ரவம் தீர்ந்தவாறே காலவைஷம்யத்

தாலே திருநகரியில்நின்று ஆழ்வார் கோயிலுக்கெழுந்தருளாமலிருக்க, அப்போது எம்பெருமானார் அவ்விடத்தில் ஓராழ்வாரை திருப்பிரதிஷ்டைசெய்வித்து அவரைக்கொண்டு ஸ்ரீமந்நாதமுநிகள் நியமனப்படி திருவத்யயநோத்ஸவத்தை நடப்பிக்கும்போது தமது விஷயமாய் அமுதனார்செய்தருளிய நூற்றந்தாதியை அழகியமணவாளன் நியமனத்தால் இயற்பா முடிவில்சேர்த்துப் பாட்டுகளாலேயும் நாலாயிரமாகச் செய்து அநுஸந்திக்கும்படி செய்வித்துநிற்க, அழகியமணவாளன் நம்மிராமாநுசனென்று அருளப்பாடிட்டு வரிசைகளும் ப்ரஸாதித்தருள, அப்போது "ஸர்வதேஶ" என்கிற ஸ்லோகத்தைப் பிள்ளானும், "ராமாநுஜார்ய" என்கிற ஸ்லோகத்தை முதலியாண்டானும், "ஸ்ரீமந்" என்கிற வாக்கியத்தை எம்பெருமானாரும் அருளிச்செய்து ப்ரபந்தமுடிவில் இம்மூன்றையும் அநுஸந்திக்கும்படிக்கும், கூரத்தாழ்வான் அருளிச்செய்த "லக்ஷ்மீநாத" "யோநித்யமச்யுத" ஆளவந்தார் அருளிச்செய்த "மாதாபிதா" பிள்ளான் அருளிச்செய்த "பூதம்ஸரஶ்ச" இந்நான்கு ஸ்லோகங்களையும் அநுஸந்தித்தும், பின்பு அநுஸந்திக்கவேண்டுவதான ப்ரபந்தத்தை ஸேவித்துமுடித்துப் பின்பு முன்சொன்ன ஸர்வதேஸ இத்தியாதி ஸ்லோக வாக்கியங்களையும் அநுஸந்திக்கும்படிக்கு நியமித்தருளி, மற்ற ஆழ்வார்களையும், சில ஆசார்யர்களையும், ஆண்டாளையும் கோயிலில் திருப்பிரதிஷ்டை செய்வித்து மற்றுமுள்ள திவ்யதேஸங்களிலும், ஆழ்வார்கள், ஆசார்யர்கள், ஆண்டாள் இவர்கள் திருப்பிரதிஷ்டையையும், திருவத்யயநோத்ஸவத்தையும் கோயிலில் நடத்துவதுபோலவே நித்தியாநுஸந்தாநமுதலான ப்ரபந்தாநுஸந்தானத்தையும் செய்வித்துக் கோயில்களில் ஆழ்வாராசார்யர்கள் திருநக்ஷத்திரங்களில் ப்ரபந்தாநுஸந்தாநத்தையும், திருமாளிகைகளிலும், நித்தியமாகவும், ஆசார்யர்கள் திருநக்ஷத்திரங்களிலும், ஒருவர் திருநாட்டுக்கெழுந்தருளினால் அவருக்குத்துவாதஶாஹாந்த கைங்கர்யங்களைச்செய்து, பின்பு பிராயச்சித்தரூபமான வேதபாராயணத்திலும், ப்ரபந்தாநுஸந்தாநத்தையும், நூற்றந்தாதியைக்கொண்டு இயல் நடத்தும்படிக்கும், இந்நாலாயிரங்களில் ஏதேனுமொரு ப்ரபந்தத்தை அநுஸந்திக்கும்போது திருப்பல்லாண்டான முதல் திருமொழியை முதலிலும், அத்திருமொழியின் முதல் இரண்டுபாட்டுகளை முடிவிலும், திருவாய்மொழிமுதல் முடிவுகளில் கண்ணிநுண்சிறுத்தாம்பையும் அநுஸந்திக்கும்படிக்கும் நியமித்தருளித் தாம் திருநாட்டுக்கெழுந்தருளும்போது தம்மைப்போலே மூன்று திவ்ய மங்கள விக்ரஹங்களைச்

செய்வித்து அவைகளைத்தாமாலிங்கனம்பண்ணியருளித் திருக்குருகைப்பிரான்பிள்ளான், முதலியாண்டான், கிடாம்பியாச்சான் இம்மூவர்களுக்கும் ப்ரஸாதித்தருளித் தாம் பெரியபெருமாளை மங்களாஸாஸநம் செய்தருளி மடமேறவெழுந்தருளி, பெரியநம்பி முதலான முன்னோர்கள் திருவடி நிலையின் தீர்த்தத்தைத் தாம் ஸ்வீகரித்துத் திருநாட்டுக் கெழுந்தருளினர்.

பின்பு, அவருக்கு ஸ்ரீசூர்ணபரிபாலனத்தில் திருவாய்மொழிக்குப் பின்பு நூற்றந்தாதியடியில் ஏழுபாட்டுகளை அநுஸந்தித்துப் பின்பு பிரம்மரதம் நடத்திக் கைங்கர்யங்களை யெல்லாம் திருக்குருகைப்பிரான்பிள்ளான் பரக்கச்செய்தருளினபின்பு கோயிலிலே பிள்ளானும், ஸ்ரீபெரும்பூதூரிலாண்டானும், திருநாராயணபுரத்திலாச்சானும் அந்தத் திவ்யமங்கள விக்ரஹங்களைத் திருப்பிரதிஷ்டை செய்வித்துப் பின்பொருகால் ஸ்ரீபாஷ்யம் சாத்தும்போது "சீராருமெதிராசர்" என்கிற பாசுரத்தைப் பிள்ளானும், "அறுசமயச்செடி" என்கிற பாசுரத்தை ஆச்சானும், "சங்கரபாஸ்கர" என்கிற பாசுரத்தை ஆண்டானும் அருளிச்செய்தார்கள்.

பின்பொருகால், திருக்குருகைப்பிரான்பிள்ளான் ப்ரபந்த கர்த்தாக்கள் விஷயமாக ஒவ்வொருகாலங்களில் ஒவ்வொரு ஆசாரியர்கள் வடமொழியாலும், தென்மொழியாலும் செய்தருளிய தனியன்களை முன்னம் அநுஸந்தித்துப் பின்பு அந்தந்த ப்ரபந்தங்களை அநுஸந்திக்கும்படி நியமித்தருளினர்.

பின்பு வேதாந்ததேசிகன் கவிதார்க்கிகஸிம்ஹமென்று பெரியோர்களால் புகழப்பட்டுப் பெருமாள்கோயிலில் எழுந்தருளியிருக்கும்போது கோயிலிலே மிஸ்ரர்கள்வந்து வேதத்தோடு திவ்யப்ரபந்தத்தை ஸமமாக அநுஸந்திக்கக்கூடாதென்றும் ஸ்ரீபாஷ்யத்தில் பூர்வபக்ஷங்கள்பண்ணி, உத்தரம் சொன்னதொழிய பெருமாளுக்குத் திருவாராதநம் பண்ணக்கூடாதென்றும் நிர்ப்பந்திக்க, அப்போது தேசிகனுக்குப் பெரியபெருமாள் திருமுகப்பட்டய மனுப்புவிக்க, அந்த நியமனத்தைச் சிரஸாவகித்துத் தேசிகனும் கோயிலுக் கெழுந்தருளி, அவர்களை வாதத்தாலே நிரஸித்துப் பின்னோர்களுமிப்படியே வாதிகளை நிரஸிக்கும்படி க்ரந்தங்களையுஞ் செய்தருளி ப்ரபந்தாநுஸந்தாநத்தையும், திருவாராதநத்தையும் நடத்துவிக்க, பெருமாளும், நாச்சியாருமுகந்தருளி, அஸாதாரணமாகவே தேசிகனுக்கு வேதாந்தாசார்யரென்றும், ஸர்வதந்த்ர ஸ்வதந்த்ரரென்றும்

திருநாமங்களை ப்ரசாதித்தருளினார்கள். பின்பு துலுஷ்கோபத்ரவந் தீர்ந்தவுடன் மேனாட்டிலிருந்து அழகியமணவாளன் எழுந்தருளின பின்பு திருவத்யயநோத்ஸவத்தையும், ஆழ்வாராசார்யர்களுக்குத் திருமாலை முதலான வரிசைகளையும் ப்ரபந்தாநுஸந்தாநத்தையும் பண்ணக்கூடாதென்று உபரோதம்பண்ண, அப்போது அழகிய மணவாளன் நியமனத்தாலும், அங்குள்ளார் ப்ரார்த்தனையாலும் விரோதிகளை விலக்கித் திருமங்கையாழ்வார், நாதமுநிகள், எம்பெருமானார், திருக்குருகைப்பிரான்பிள்ளான் இவர்களது நியமனப் படிக்கு ப்ரபந்தாநுஸந்தாநத்தையும், ஆழ்வாராசார்யர்களுக்கு வரிசைகளையும், திருவத்யயநோத்ஸவத்தையும் குறைவற நடப்பித் தருள, நம்பெருமாளும், நம்மிராமாநுசன் பொன்னடியென்று அருளுப்பாடிட்டு வரிசைகளும் ப்ரசாதித்தருள, அப்போது இப்படிக்கு ப்ரபந்த விரோதிகளை வாதங்களாலும், க்ரந்தங்களாலும் நிரஸித்த தேசிகர்விஷயமாகப் பிரம்மதந்த்ர ஸ்வதந்த்ரஜீயர் அருளிச்செய்த பகவத்விஷயத்தனியனான "ராமாநுஜதயாபாத்ரம்" என்கிற ஸ்லோகத்தை முன்னமநுஸந்தித்துப் பின்பு எம்பெருமானார் நியமனப் படிக்கு ப்ரபந்தாநுஸந்தாநம்பண்ணும்படி நியமித்தருளவேண்டுமென்று அழகியமணவாளனை அத்திருவோலக்கத்தில் ப்ரார்த்திக்க, அப்படியே பெருமாளும் நியமித்துக்கேட்டருள, ப்ரபந்தத்தை முடித்து "ஸ்ரீமந்" என்கிற வாக்யமளவாக அநுஸந்தித்துநிற்க, அப்போது தேசிகர், கோயில் முதலான ஸமஸ்த திவ்யதேசங்களிலும், ஒருகுறைவுமின்றியே இச்செல்வம் நித்யமாகத் தழைக்க வேண்டுமென்று அத்தலைக்கு மங்களாஸாஸநமாய் எம்பெருமானாருளிச்செய்த "ஸ்ரீமந்" என்கிற வாக்கியத்தைப் புனராவர்த்தி அநுஸந்தித்து இப்படிக்கொத்த விசேஷகடாக்ஷத்தை எம்பெருமான் தம்மிடத்தில் செய்வதற்கு உபகாரகரான தம்மாசார்யர் விஷயமாக "நமோராமாநுஜார்யாய" என்கிற ஸ்லோகத்தைத் தாம் அநுஸந்திக்க, அதைக்கேட்ட அங்குள்ளார்களும் வேதத்துக்கு ப்ரணவம் போலே ப்ரபந்தத்துக்கு "ராமாநுஜதயாபாத்ரம்" என்கிற ஸ்லோகமாகக்கடவதென்று தங்களுக்கு ஆசார்யர்விஷயமான அந்த ஸ்லோகத்தையும் அநுஸந்திக்க, அதை அழகியமணவாளன் திருச்செவி சாத்தியருள, அப்பெருமைக்கு மங்களாஸாஸநமாக "வாழியிராமாநுசப்பிள்ளான்" என்றும், "வஞ்சப்பலசமயமாற்றவந்தோன்வாழி" என்றும் இரண்டுபாசுரங்களை நைனாராசார்யர் விண்ணப்பஞ்செய்ய, இப்படிப்பட்ட ஸமிர்த்தியைச் செய்வித்தருளின தேசிகரைப்

பல்லாண்டு பல்லாண்டென்று மங்களாஸாஸநம் பண்ணுகிறவராய் "நானிலமுந்தான்வாழ" என்கிற பாசுரத்தைப் பிரம்மதந்த்ரஸ்வதந்த்ர ஜீயர் விண்ணப்பஞ்செய்ய, அதை நம்பெருமாளும் கேட்டுகந்தருள, இப்படிக்கு ப்ரபந்தாநுஸந்தாநத்துக்கு முன்பு "ராமாநுஜதயாபாத்ரம்" என்கிற ஸ்லோகமுதலாக 5-ஸ்லோகங்களையும், பின்பு "ஸர்வதேச" "ராமாநுஜார்ய" என்கிற இரண்டு ஸ்லோகங்களையும், "ஸ்ரீமந்" என்கிற வாக்கியத்தை இரண்டுதரமும், "நமோராமாநுஜார்யாய" "ராமாநுஜதயாபாத்ரம்" என்கிற இரண்டு ஸ்லோகங்களையும், "வாழியிராமாநுசப்பிள்ளான்" "வஞ்சப்பலசமயம்" "நானிலமுந்தான்வாழ" என்கிற மூன்று பாசுரங்களையும், கோயில்களிலும், திருமாளிகைகளிலும் ப்ரபந்தாநுஸந்தாநம் பண்ணும்போதெல்லாம் அநுஸந்திக்கக் கடவனவென்றும், ஸர்வதேச இத்யாதியான ஸ்லோகவாக்ய காதைகளுக்கு வாழித்திருநாமமென்றும் திருநாமஞ்சாத்தி இப்படி அநுஸந்திக்கும்படி அத்திருவோலக்கத்துள்ளார்கள் அழகிய மணவாளனை ப்ரார்த்திக்க, பெருமாளும் அப்படியே நடப்பிக்கும்படி அர்ச்சகமுகேன திருவாய்மலர்ந்தருள, அப்படியே தேசிகரும் அங்கங்குள்ள பெரியோர்களும், அங்கங்குள்ள கோயில்களிலும், திருமாளிகைகளிலும் நடத்திப்போந்தார்கள்.

பின்பு, தேசிகர் திருநாட்டுக்கெழுந்தருளும்போது அழகிய மணவாளன் ஸ்ரீரங்கநாச்சியார் இவர்களது நியமனப்படிக்கு ஓர் திருக்கை ஸ்ரீகோசத்தையும், மற்றோர் திருக்கை ஞானமுத்திரையையும் உடையனவாகத் தேசிக திவ்யமங்கள விக்ரஹமொன்றையேறியருளப்பண்ணி ஸ்ரீரங்கநாயகி ஸந்நிதிக்குமுன்பு ஒருஸந்நிதி கட்டுவித்து அதிலப்போதுள்ளார்கள் திருப்பிரதிஷ்டை செய்விக்க, ஸ்ரீரங்கநாச்சியாரும் தமது திருமாலையை அவ்வர்ச்சாவிக்ரஹமாக எழுந்தருளியிருக்கும் தேசிகனுக்கு ப்ரஸாதித்து இப்படியே நித்யமாக நடப்பிக்கும்படிக்கு நியமித்தருளினார்.

பின்பு, ஒரு புரட்டாசித் திருவோணத்திருநாளில் அர்ச்சையாய் எழுந்தருளியிருக்கிற அத்தேசிகருக்குத் திருமாலைமுதலான வரிசைகளை அழகியமணவாளன் ப்ரஸாதித்து ப்ரபந்தம் சாத்தினபின்பு அத்திருவோலக்கத்துக்கு மங்களாஸாஸநமாய் "வாழியணிதூப்புல்" என்கிற பாசுரத்தை பிரம்மதந்த்ர ஸ்வதந்த்ர ஜீயர் விண்ணப்பஞ்செய்ய, "வாதாசனவரர்" என்கிற திருநாட்பாசுரத்தை நைனாராசார்யர் விண்ணப்பஞ்செய்ய, "செங்கமலத்தயனன்னவர்" என்கிற பாசுரத்தை வெண்ணெய்க்கூத்த ஜீயர் விண்ணப்பஞ் செய்ய, இப்

பாட்டுகள் மூன்றையும் அவ்வுத்ஸவத்தில் அநுஸந்திக்கும்படி பெரியோர்கள் ப்ரார்த்திக்க, நைனாராசார்யரும் அப்படியே நியமித்தருளினார்.

பின்பு, பிரம்மதந்த்ர ஸ்வதந்த்ர ஜீயருடனே திக்விஜயமும் அந்தந்த திவ்யதேஸங்களில் தேசிகப்ரதிஷ்டையும் செய்துகொண்டு தஞ்சைமாநகரில் எழுந்தருளியிருக்கும்போது அங்கோர் ஸ்ரீவைஷ்ணவர் திருக்கார்த்திகைக்குப்பின்பும், திருவத்யயனோத்ஸவத்திற்கு முன்புமானகாலத்தில் திருநாட்டுக்கெழுந்தருள, அதுகுறித்து அவரது சம்பந்திமுதலானோர் இக்காலத்தில் என்செய்யக்கடவதென்று அதிசங்கித்ததை அந்தத் திவ்யதேஸத்தெம்பெருமானை நீலமேகப்பெருமாள் திருவோலக்கத்தில் எழுந்தருளியிருக்கும் நைனாராசார்யர் ஸந்நிதியில் விண்ணப்பஞ்செய்ய, நைனாராசார்யரும் அந்த எம்பெருமான் நியமனத்தாலும், அங்குள்ளார் ப்ரார்த்தனையாலும், நாலாயிரத்தனியன்களையும் முன்னமநுஸந்தித்துத் தேசிகர் விஷயமாகப் பிள்ளைலோகாசார்யர் அருளிச்செய்த "சீரொன்றுதூப்புல்" என்கிற தமிழ்த்தனியனையும் அநுசந்தித்து, ப்ரபந்தங்களான பெரியாழ்வார் திருமொழி முதலா நூற்றந்தாதி அளவாகவுள்ள இருபத்துநான்கு ப்ரபந்தங்களையும், அடியோத்திருக்கிற அமிர்தரஞ்சநிமுதலாக ப்ரபந்தஸாரமளவாகவுள்ள இருபத்துநான்கு தேசிகப்ரபந்தங்களையும் அந்த ஸந்நிதியில் முன்னமநுஸந்திக்க, அப்பொழுது பிரம்மதந்த்ரஸ்வதந்த்ரஜீயரும், ஆழ்வார் விஷயமான கண்ணிநுண்சிறுத்தாம்பை முதலாயிரம் முடிவில் நாதமுநிகள் சேர்த்தாப்போலவும், எம்பெருமானார் விஷயமான நூற்றந்தாதியை இயற்பா முடிவில் அவ்வெம்பெருமானாரே சேர்த்தாப்போலவும், ஆழ்வார் எம்பெருமானாரைப்போலே திவ்யமங்கள விக்ரஹத்தையும், திருமாலை முதலான வரிசைகளையும், தேசிகருக்கு அழகியமணவாளனும், ஸ்ரீரங்கநாச்சியாரும் ப்ரசாதிக்கும்படி நியமித்தருளினபடியால் அத்தேசிகர் விஷயமான பிள்ளையந்தாதியையும், தேசிகப்ரபந்தங்களின் முடிவில் சேர்த்து அநுஸந்திக்கவேண்டுமென்று அத்திருவோலக்கத்தில் எம்பெருமானை ப்ரார்த்திக்க, அப்படியே அந்த எம்பெருமானும் அர்ச்சகமுகேன திருவாய்மலர்ந்தருள, அப்படியே நைனாராசார்யரும் முதலிகளுடனே தாம்செய்த பிள்ளையந்தாதியையும் அநுஸந்தித்து, அப்பிரபந்தங்களில் அதிகாரசங்க்ரஹம், ப்ரபந்தஸாரம், பிள்ளையந்தாதி இம்மூன்று ப்ரபந்தங்களின் முடிவில் இரண்டு பாட்டுகளைச் சாத்துப் பாட்டுகளாக நியமித்துச் சாத்திப் பிரதிஸம்வத்ஸரம் திருவத்ய

யனேத்சவத்தில் இயற்பாவாயிரத்தைச் சாத்தின மற்றுநாளில் தேசிகருக்கு வரிசைகளை ப்ரசாதிப்பித்துத் தேசிகப்ரபந்தங்களை அநுஸந்தித்து முன்சொன்னபடி சாத்தினபின்பு, திருப்பல்லாண்டு தொடக்கஞ்செய்யக் கடவதென்று நியமித்தருளி, அந்த எம்பெருமான் ப்ரசாதித்த வரிசைகளையும்பெற்று இப்படியே மற்றுமுள்ள திவ்யதேஸங்களிலும், திருமாளிகைகளிலும் அநுஸந்திக்கும்படி நியமித்து அந்த ஸ்ரீவைஷ்ணவருக்கு உடையவர் நியமனப்படி நாலாயிரத் தனியன்களையும், தேசிகர் ப்ரபந்தங்களையுங்கொண்டு திருவத்யயனத்தையும், பிள்ளையந்தாதியைக்கொண்டு இயல்சேவையையும் நடத்தி முடிவில் “பொய்கைமுனி பூதத்தார்” என்கிற பாசுர முதலாய் “ஆளுமடைக்கலம்” என்னும் அளவாகவுள்ள 7-பாசுரங்களையும், “விண்ணவர் வேண்டி” என்கிற பாசுரத்தை “தமிழ்வேத மறிந்த பகவர்களே” என்று முடித்து இதுக்கு இயல்சாத்தென்றும் திருநாமஞ்சாத்தி இப்படியே மற்றுமுள்ள கோயில்களிலும், திருமாளிகைகளிலும் ப்ரபந்தாநுஸந்தாநத்தையும் செய்யும்படி நியமித்தருளித் திருப்பல்லாண்டு தொடங்கினபின்பு உடையவர் நியமனப்படி நாலாயிரத்தில் க்ரமமான பிரபந்தத்தை அநுஸந்தித்தபின் தேசிகப்ரபந்தத்தையும் அநுஸந்தித்து நாலாயிரத்தில் ஸேவித்த ப்ரபந்தத்தைச்சாத்தி “அப்பாஞ்சஸன்னியமும் பல்லாண்டே” என்று முடித்துத் தேசிகப்ரபந்தங்களையும் சாத்தும்படிக்கு நியமித்தருளினர்.

பின்பு, கோயிலேறவெழுந்தருளினவாறே, ஒரு பங்குனி உத்திரத்திருநாளில் பெருமாளும், நாச்சிமாரும் ஒருசேர்த்தியி லெழுந்தருளியிருந்து எம்பெருமானருளிச்செய்த கெத்யத்ரயத்தைக்கேட்டருளினபின் அவ்வர்த்தங்களை விசதமாகக்காட்டுகிற தேசிகப்ரபந்தங்களையும், திருச்செவிசாத்தியருள வேண்டுமென்று நைனாராசாரியர் பெருமாளை ப்ரார்த்திக்க, எம்பெருமானும் அவைகளை அநுஸந்திக்கும்படி அரையருக்கருளப்பாடிட்டருள, அரையரும் தம்பாமென்றுதொடங்கி ப்ரபந்தங்களை அநுஸந்தித்து வரும்போது அரையர் “என்னிது யான்செய்கின்றேன்” என்கிற பாசுரத்திலும், “நின்னருளாங்கதி” என்கிற பாசுரத்திலும் ஈடுபட்டு மெய்ம்மறந்து 10-வாரம் அநுஸந்தித்துப் பின்பு தெளிந்து ப்ரபந்தங்கள் சாற்றினவாறே அழகியமணவாளனும் அர்ச்சையா யெழுந்தருளியிருக்கில் தேசிகருக்குந் திருமாலைமுதலிய வரிசைகளை ப்ரசாதித்தருளினர்.

பின்பு, நைனாராசார்யர் பிரம்மதந்த்ரஸ்வதந்த்ர ஜீயருடனே திக்விஜயமும், திவ்யதேஸங்களில் தேசிகப்ரதிஷ்டையுஞ் செய்து கொண்டு ஸ்ரீபெரும்பூதூரில் எம்பெருமானார் சந்நிதியிலும், தேசிகர் திருப்ரதிஷ்டை செய்வித்து ப்ரபந்தாநுஸந்தாநத்தை வாழித்திருநாமத்தோடு முடித்துஎம்பெருமானார் வைபவத்தை நெஞ்சில்கொண்டு, முன்னொருகால் பிள்ளான், ஆச்சான், ஆண்டான் இவர்களருளிச்செய்த “சீராருமெதிராசர்” “அறுசமயச்செடி” “சங்கரபாஸ்கர” ஆகிய இம்மூன்று பாட்டுகளையும் அந்தத் திவ்யதேசத்தில் நித்யமாக அநுஸந்திக்கும்படிக்கும், கோயில்களிலும், திருமாளிகைகளிலும், ஆழ்வார் அவதாரத்திருநாளில் ப்ரபந்தஸாரத்தில் அவரவர்கள் விஷயமாயிருக்கிற பாட்டுகளை அநுஸந்திக்கும்படிக்கும், ஆழ்வார்கள், ஆசார்யர்கள் விஷயங்களாக “சீராருமெதிராசர் திருவடிகள் வாழி” என்கிற பாட்டுகள்போலவே மங்களாஸாஸநமாக ஒவ்வொருபாட்டுகளைத் தாம் அருளிச்செய்து, அப்பாட்டுகளில் அவ்வாழ்வார்கள் ஆசார்யர்கள் விஷயமான ஒருபாட்டையும் அநுஸந்திக்கும்படிக்கும் நியமித்தருளினார்.

பின்பு, எந்நாளும் காலையிலும் மாலையிலும் ப்ரபந்தஸாரத்தையும், பிள்ளையந்தாதியையும் அநுஸந்திக்கவேண்டுமென்றும், திருவத்யயனகாலத்தில் மாத்திரம் சீர்பாடல் வரும்போது “ராமாநுஜ தயாபாத்ரம்” முதலாக 5-ஸ்லோகங்களையும், “அல்லிநாட்டாமரை மேல்” என்கிற தனியனையும் அநுஸந்தித்துப் பின்பு, ஸ்ரீமந்நாதமுநிகள் நியமனப்படி ஸம்பந்திகள் சீர்பாடுகிறதென்றும், ஸ்ரீசூர்ண பரிபாலனம் வரும்போது திருப்பல்லாண்டு, கண்ணிநுண்சிறுத்தாம்பு, திருவாய்மொழி, நூற்றந்தாதி இவைகளின் தனியன்களையும், தேசிக ப்ரபந்தத்தில் பரமபதஸோபானத்தையும், பன்னிருநாமத்தையும், திருவிருத்த ஸ்தானத்தில் பிள்ளையந்தாதியையும் அநுஸந்திக்க வேண்டுமென்றும் நியமித்து, இப்படி ஸ்ரீவைஷ்ணவர்கள் தங்கள் திருமாளிகைகளில் விசேஷகாலங்களில் ப்ரபந்தாநுஸந்தாநம் பண்ணும்போதெல்லாம் ஆழ்வார் எம்பெருமானார் ஸம்பாவனை பண்ணும்படி எம்பெருமானார் நியமித்தாற்போல, ஆழ்வார், எம்பெருமானார் வேதாந்ததேசிகர் மூவர்களுக்கும் ஸம்பாவனை பண்ணும்படிக்கும், சீர்பாடலில் ஆண்டாள் ப்ரபந்தமான “வாரணமாயிரம்” என்கிற திருமொழியைச் சாத்தும்போது ஆண்டாள் ஸம்பாவனையும், பின்பு, பெருமாள், பிராட்டியார், ஆழ்வார், எம்பெருமானார், வேதாந்த தேசிகர் ஸம்பாவனையும் பண்ணும்படிக்கும், இயல்சேவைபண்ணும்

போது நூற்றந்தாதியில் எம்பெருமானார் ஸம்பாவனையும், பிள்ளை யந்தாதியில் வேதாந்ததேசிகர் ஸம்பாவனையும் பண்ணிப் பின்பு ப்ரபந்தங்களைச் சாத்தும்போது ஆழ்வார், எம்பெருமானார் வேதாந்த தேசிகர் மூவர் ஸம்பாவனையும், பின்பு அவரவர்கள் ஆசார்யர்க ளுக்கு ஸம்பாவனையும் பண்ணும்படிக்கு நைனாராசார்யர் நியமித் தருளினார்.

"கோதைபிறந்தவூர்" "பாதகங்கடீர்க்கும்" என்கிற இரண்டு பாசுரங்களைத் திருப்பாவை நாள்பாட்டு சாத்தினபின்பு சில திவ்ய தேசங்களில் அநுஸந்தித்துக்கொண்டு வருகிறார்கள். அங்குள்ளார் களும் தேசிகப்ரபந்தம் சாத்தும்போது அவ்விரண்டு பாசுரங்களை அநுஸந்தியாமல் திருப்பாவை நாள்பாட்டுக்கு பின்பு தேசிகர் ப்ரபந் தத்தையே சாத்திக்கொண்டு வருகிறார்கள்.

பின்பு, தாம் செய்தருளின "ஸ்ரீமான்வேங்கடநாதார்ய" என் கிற ஸ்லோகத்தை முன்னம் அநுஸந்தித்துப் பின்பு தேசிகர் ஸாதி த்த ஸ்தோத்திரங்களை அநுஸந்தித்துப் பின்பு, "கவிதார்க்கிகஸிம் ஹாய" என்கிற ஸ்லோகத்தை முடிவில் அநுஸந்திக்கும்படிக்கும் நியமித்தருளினார்.

## அவதாரக்கிரமம்

கலியுகாதிவருஷமான பிரமாதிஹு வைகாசி விசாகத்தில் நம் மாழ்வார் திருவவதாரம்.

கலி 3685-வது சோபகிருதுஹு ஆனி அநுஷத்தில் ஸ்ரீமந் நாதமுனிகள் திருவவதாரம்.

கலி 4119-வது பிங்களஹு சித்திரை திருவாதிரையில் எம் பெருமானார் திருவவதாரம்.

கலி 4164-வது சுபகிருதுஹு வைகாசி அநுஷத்தில் பட்டர் திருவவதாரம்.

கலி 4169-வது பிலவங்கஹு ஐப்பசி பூராடத்தில் திருக்குரு கைப்பிரான்பிள்ளான் திருவவதாரம்.

கலி 4208-வது வியஹு ஆனி ஸ்வாதியில் எங்களாழ்வான் திருவவதாரம்.

கலி 4267-வது பார்த்திவஹு சித்திரை சித்திரையில் நடாதூர் அம்மாள் திருவவதாரம்.

கலி 4309-வது பிரபவஹு கார்த்திகை கிர்த்திகையில் நம் பிள்ளை திருவவதாரம்.

கலி 4322-வது விக்கிரமஹு சித்திரை திருவாதிரையில் அப்புள்ளார் திருவவதாரம்.

கலி 4329-வது சர்வசித்துஹு ஆனி ஸ்வாதியில் வடக்குத் திருவீதிப்பிள்ளை திருவவதாரம்.

கலி 4329-வது சர்வசித்துஹு ஆவணி ரோகிணியில் பெரிய வாச்சான்பிள்ளை திருவவதாரம்.

கலி 4367-வது குரோதனஹு ஐப்பசி திருவோணத்தில் பிள்ளைலோகாசார்யர் திருவவதாரம்.

கலி 4371-வது சுக்கிலஹு புரட்டாசி திருவோணத்தில் வேதாந்ததேசிகர் திருவவதாரம்.

கலி 4448-வது வியஹு கார்த்திகை ரோகிணியில் கிடாம்பி நயினர் திருவவதாரம்.

கலி 4472-வது சாதாரணஹு ஐப்பசி மூலத்தில் மணவாள மாமுநிகள் திருவவதாரம்.

கலி 4431-வது சுக்லஹு சித்திரைமீ புநர்பூச நக்ஷத்திரத்தில் கோயிலிலே "ஸ்ரீமான்வேங்கடநாதார்ய" என்கிற ஸ்லோகம் அவதரித்தது. அன்றுமுதல் சுதர்சனபட்டர் நியமனத்தால் அநுஸந்தித்துக்கொண்டு வருகிறார்கள்.

கலி 4440-வது வெகுதான்யஹு ஆவணிமீ அஸ்தநக்ஷத்திரத்தில் திருநாராயணபுரத்தில் "ராமாநுஜதயாபாத்ரம்" அவதரித்தது.

கலி 4450-வது சர்வதாரிஹு மார்கழிமீ திருவத்யயனோத்சவத்தில் அதை வாழித்திருநாமத்தோடு அநுஸந்திக்கும்படி அழகிய மணவாளன் நியமித்துத் திருச்செவிசாத்தியருளினர்.

கலி 4472-வது சாதாரணஹு கார்த்திகைமீ திருக்கார்த்திகைக்குப் பின்பு தஞ்சைமாநகரத்தில் நீலமேகப்பெருமாள் ஞாலாயிரத்தனியன்களையும், தேசிகப்ரபந்தங்களையுங் கேட்டருளினது.

ஷை ஹு பங்குனி உத்திரத்திருநாளில் அழகியமணவாளன் தேசிகப்ரபந்தங்களைத் திருச்செவிசாத்தியருளினது. அன்றுமுதல் திவ்யதேசங்களிலும், திருமாளிகைகளிலும், எம்பெருமானர் நியமனப்படிக்கு நைனாராசார்ய நியமனத்தால் அவைகளைச் சேவித்துக் கொண்டுவருகிறார்கள்.

தேசிகர் திருவடிகளே சரணம்.

**ப்ரபந்தாநுஸந்தானதீபிகை ஸம்பூர்ணம்.**

ஸ்ரீ

# தேசிகப்ரபந்தங்களின் விவரம்

| | பாசுரம் |
|---|---|
| அமிர்தாஞ்சநி | 39 |
| அதிகாரஸங்க்ரஹம் | 56 |
| அமிர்தாஸ்வாதினி | 32 |
| பரமபதஸோபானம் | 21 |
| பரமதபங்கம் | 54 |
| அத்திகிரிமஹாத்மியம் | 29 |
| அடைக்கலப்பத்து | 11 |
| அர்த்தபஞ்சகம் | 11 |
| ஸ்ரீவைஷ்ணவதினசரி | 10 |
| திருச்சின்னமாலை | 11 |
| பன்னிருநாமம் | 13 |
| திருமந்திரச்சுருக்கு | 10 |
| த்வயச்சுருக்கு | 12 |
| சரமஸ்லோகச்சுருக்கு | 11 |
| கீதார்த்தஸங்க்ரஹம் | 21 |
| மும்மணிக்கோவை | 10 |
| பந்துப்பா | 10 |
| கழற்பா | 10 |
| அம்மானைப்பா | 10 |
| ஊசற்பா | 10 |
| ஏசற்பா | 10 |
| நவரத்நமாலை | 10 |
| ஆகாரநியமம் | 21 |
| ப்ரபந்தஸாரம் | 18 |
| ஆக ப்ரபந்தம் 24-க்கு பாசுரம் | 455 |

இவைகளில் லுப்தங்களான ப்ரபந்தங்கள்; பந்துப்பா, கழற்பா, அம்மானைப்பா, ஊசற்பா, ஏசற்பா,

| | |
|---|---|
| மற்ற ப்ரபந்தங்கள் 19-க்கு பாசுரம் | 405 |
| பிள்ளையந்தாதி | 20 |
| ஆக மொத்தம் | 425 |

## ரஹஸ்ய திருநாமங்கள்

இப்பிரபந்தங்களுள் அமிர்தாஞ்சநிமுதலான ஆறும் ரஹஸ்ய ப்ரபந்தங்கள். அவைகளின் விவரம்

| | | பாசுரம் |
|---|---|---|
| 1 | சம்பிரதாயபரிசுத்தி | 2 |
| 2 | தத்வபதவி | 1 |
| 3 | ரஹஸ்யபதவி | 1 |
| 4 | தத்வநவநீதம் | 2 |

| | | பாசுரம் |
|---|---|---|
| 5 | ரஹஸ்யநவநீதம் | 2 |
| 6 | தத்வமாத்ரிகை | 3 |
| 7 | ரஹஸ்யமாத்ரிகை | 2 |
| 8 | தத்வசந்தேசம் | * |
| 9 | ரஹஸ்யசந்தேசம் | 2 |
| 10 | ரஹஸ்யஸந்தேசவிவரணம் | * |
| 11 | தத்வரத்நாவலி | 2 |
| 12 | தத்வரத்நாவலி ப்ரதிபாத்யஸங்க்ரஹம் | * |
| 13 | ரஹஸ்யரத்நாவலி | 2 |
| 14 | ரஹஸ்யரத்நாவலி ஹ்ருதயம் | 3 |
| 15 | தத்வத்ரயசுளகம் | 8 |
| 16 | ஸாரஸம்க்ஷேபம் | 9 |
| 17 | ஸாரதீபம் | * |
| | ஆக ரஹஸ்யம் 17-க்கு அமிர்தரஞ்சநி பாசுரம் | 39 |
| 18 | ஸ்ரீரஹஸ்யத்ரயஸாரம் 1-க்கு அதிகார ஸங்க்ரஹம் பாசுரம் | 56 |
| 19 | ஸாரஸாரம் | 14 |
| 20 | அபயப்ரதாநஸாரம் | 5 |
| 21 | தத்வசிகாமணி | * |
| 22 | ரஹஸ்யசிகாமணி | 4 |
| 23 | அஞ்சலிவைபவம் | 1 |
| 24 | ப்ரதாநசதகம் | 3 |
| 25 | உபகாரஸங்க்ரஹம் | 3 |
| 26 | ஸாரஸங்க்ரஹம் | 1 |
| 27 | விரோதபரிஹாரம் | 3 |
| 28 | முநிவாஹநபோகம் | 3 |
| 29 | மதுரகவி ஹ்ருதயம் | * |
| | ஆக ரஹஸ்யம் 11-க்கு அமிர்தாஸ்வாதிநி பாசுரம் | 37 |
| 30 | பரமபதஸோபாநம் ரஹஸ்யம் 1-க்கு | 21 |
| 31 | பரமதபங்கம் ரஹஸ்யம் 1-க்கு | 54 |
| 32 | ஹஸ்திகிரிமஹாத்ம்யம் ரஹஸ்யம் 1-க்கு | 29 |
| | ஆக ரஹஸ்யம் 3-க்கு பாசுரம் | 104 |
| | ஆக மொத்த ரஹஸ்யங்கள் 32-க்கு பாசுரம் | 236 |

இந்த ரஹஸ்யங்களில் லுப்தங்களாவன:

ஸாரதீபம்
மதுரகவி ஹ்ருதயம்
தத்வசிகாமணி

3

ஸ்ரீ

# நாலாயிரத்தனியன்களின் விவரம்

| தனியன்கள் | அருளிச்செய்தவர்கள் |
|---|---|
| ராமாநுஜதயாபாத்ரம் | பிரம்மதந்த்ர ஸ்வதந்த்ரஜீயர். |
| லக்ஷ்மீநாதஸமாரம்பாம்<br>யோநித்யமச்யுத | இவ்விரண்டும் கூரத்தாழ்வான். |
| மாதாபிதாயுவதய: | ஆளவந்தார். |
| பூதம்ஸரஸ்ய | பட்டர். |
| குருமுகமநதீத்ய | நாதமுநிகள். |
| மின்னார்தடமதிள்சூழ்<br>பாண்டியன்கொண்டாட | இவ்விரண்டும் பாண்டியபட்டர். |
| நீளாதுங்க | பட்டர். |
| அன்னவயற்புதுவை<br>சூடிக்கொடுத்தசுடர்க்கொடி | இவ்விரண்டும் உய்யக்கொண்டார். |
| அல்லிநாட்டாமரைமேல்<br>கோலச்சுரிசங்கை | இவ்விரண்டும்<br>திருக்கண்ணமங்கையாண்டான். |
| இன்னமுதமூட்டுகேன்<br>ஆரங்கெட | இவ்விரண்டும் மணக்கால்நம்பிகள். |
| திருச்சந்தப்பொழில்தழுவு<br>உலகுமழிசை | இவ்விரண்டும் திருக்கச்சிநம்பிகள். |
| மற்றொன்றும்வேண்டா | திருவரங்கப்பெருமாளரையர். |
| தமேவமத்வா | திருமாலையாண்டான். |
| மண்டங்குடியென்பர் | திருவரங்கப்பெருமாளரையர். |
| ஆபாதசூடம் | பெரியநம்பிகள். |
| காட்டவேகண்டபாதம் | திருமலைநம்பிகள். |
| அவிதிதவிஷ<br>வேறொன்றும் | இவ்விரண்டும் நாதமுநிகள். |
| கலயாமி | திருக்கோட்டியூர்நம்பிகள். |
| வாழிபரகாலன் | எம்பெருமானார். |
| நெஞ்சுக்கிருள்கடி | ஆழ்வான். |
| எங்கள்கதியே<br>மாலைத்தனியே | இவ்விரண்டும் எம்பார். |
| கைதைசேர் | முதலியாண்டான். |
| என்பிறவிதீர | திருக்குருகைப்பிரான்பிள்ளான். |
| சீராரும்மாடத் | குருகைகாவலப்பன். |
| நாராயணன்படைத்தான் | சீராமப்பிள்ளை. |
| கருவிருத்தக்குழிநீத்த | கிடாம்பியாச்சான். |
| காசினியோர்தாம்வாழ | அருளாளப்பெருமாளெம்பெருமானார். |
| முந்துற்றநெஞ்சே | எம்பெருமானார். |

| தனியன்கள் | அருளிச்செய்தவர்கள் |
|---|---|
| வாழிபரகாலன்<br>சீரார்திருவெழு | இவ்விரண்டும் எம்பெருமானார். |
| முள்ளிச்செழுமலரோ | பிள்ளை திருநறையூரரையர். |
| பொன்னுலகில் வானவரும் | ,, |
| பக்தாம்ர்தம் | நாதமுநிகள். |
| திருவழுதிநாடென்றும் | ஈஸ்வரமுநிகள். |
| மனத்தாலும்வாயாலும் | சொட்டைநம்பிகள். |
| ஏய்ந்தபெருங்கீர்த்தி | அனந்தாழ்வான். |
| வான்திகழும்<br>மிக்கவிறைநிலையும் | இவ்விரண்டும் பட்டர். |
| * முன்னைவினையகல<br>* நயந்தருபேரின்பமெல்லாம்<br>* இனியென்குறை | இம்மூன்றும் வேதப்பிரான்பட்டர். |
| * சொல்லின்தொகை | அமுதனாருளிச்செய்ததாதல், அவரபிப்பிராயத்தாலே அபிநிவேசமுடைய ஆஸ்திகருளிச்செய்ததாதல். |

## தேசிகப்ரபந்தத் தனியன்

| | |
|---|---|
| சீரொன்றுதூப்புல் | பிள்ளைலோகாசார்யர். |

## வாழிதிருநாமம்

| | |
|---|---|
| ஸர்வதேசதசாகாலே | பெரியஜீயர். |
| ராமாநுஜார்ய | கந்தாடையண்ணன். |
| † ஸ்ரீமந்ஸ்ரீரங்கஸ்ரீய | எம்பெருமானார். |
| நமோராமாநுஜார்யாய | வேதாந்ததேசிகர். |
| ராமாநுஜதயாபாத்ரம் | பிரம்மதந்த்ரஸ்வதந்த்ரஜீயர். |
| வாழியிராமாநுசப்பிள்ளான்<br>வஞ்சப்பலசமயம் | இவ்விரண்டும் நைனாராசார்யர். |
| நாணிலமுந்தான்வாழ<br>வாழியணிதூப்புல் | இவ்விரண்டும் பிரம்மதந்த்ரஸ்வதந்த்ரஜீயர். |
| வாதாசனவரர் | நைனாராசார்யர். |
| செங்கமலத்தயன் | வெண்ணெய்க்கூத்தஜீயர். |
| ஸ்ரீமாந்வேங்கடநாதார்ய:<br>கவிதார்க்கிகஸிம்ஹாய | இவ்விரண்டும் நைனாராசார்யர். |

* இந்நான்கும் இராமாநுஜநூற்றந்தாதியின் தனியன்கள்.

† இதை இரண்டுதரம் அநுஸந்தானம் பண்ணச்செய்தவர் வேதாந்த தேசிகர்.

ஸ்ரீ

# நாலாயிரத்தனியன்கள்

## ஸ்லோகம்

ராமாநுஜதயாபாத்ரம் ஜ்ஞாநவைராக்யபூஷணம்
ஸ்ரீமத்வேங்கடநாதார்யம் வந்தேவேதாந்ததேஸிகம்.

லக்ஷ்மீநாதஸமாரம்பாம் நாதயாமுநமத்யமாம்
அஸ்மதாசார்யபர்யந்தாம் வந்தேகுருபரம்பராம்.

யோநித்யமச்யுதபதாம்புஜயுக்மருக்ம
வ்யாமோஹதஸ்ததிதராணித்ருணாயமேநே
அஸ்மத்குரோர்பகவதோஸ்யதயைகஸிந்தோ
ராமாநுஜஸ்யசரணௌஶரணம்ப்ரபத்யே.

மாதாபிதாயுவதயஸ்தநயாவிபூதிஸ்
ஸர்வம்யதேவநியமேநமதந்வயாநாம்
ஆத்யஸ்யந:குலபதேர்வகுளாபிராமம்
ஸ்ரீமத்ததங்க்ரியுகளம்ப்ரணமாமிமூர்த்நா.

பூதம்ஸரஶ்யமஹதாஹ்வயபட்டநாத
ஸ்ரீபக்திஸாரகுலஶேகரயோகிவாஹாந்
பக்தாங்க்ரிரேணுபரகாலயதீந்த்ரமிஶ்ராந்
ஸ்ரீமத்பராங்குஶமுநிம்ப்ரணதோஸ்மிநித்யம்.

குருமுகமநதீத்யப்ராஹவேதாநஶேஷாந்
நரபதிபரிக்லுப்தம்ஶுல்கமாதாதுகாம:
ஸ்வஶுரமமரவந்த்யம்ரங்கநாதஸ்யஸாக்ஷாத்
த்விஜகுலதிலகந்தம்விஷ்ணுசித்தம்நமாமி.

## நேரிசைவெண்பா

மின்னார் தடமதிள்சூழ் வில்லிபுத்தூ ரென்றொருகால் *
சொன்னார் கழற்கமலம் சூடினோம் *—முன்னாள்
கிழியறுத்தா னென்றுரைத்தோம் * கீழ்மை யினிற்சேரும்
வழியறுத்தோம் நெஞ்சமே! வந்து.

பாண்டியன் கொண்டாடப் பட்டர்பிரான் வந்தானென்று *
ஈண்டிய சங்க மெடுத்தூத *—வேண்டிய
வேதங்க ளோதி விரைந்து கிழியறுத்தான் *
பாதங்கள் யாமுடைய பற்று.

## ஸ்லோகம்

நீளாதுங்கஸ்தநகிரிதடீ ஸுப்தமுத்போத்யக்ருஷ்ணம்
பாரார்த்யம்ஸ்வம்ஶ்ருதி ஶதஶிரஸ்ஸித்தமத்யாபயந்தீ
ஸ்வோச்சிஷ்டாயாம் ஸ்ரஜிநிகளிதம்யாபலாத்க்ருத்யபுங்க்தே
கோதாதஸ்யைநமஇதமிதம் பூயஏவாஸ்துபூய:.

இருவிகற்ப நேரிசைவெண்பா

அன்ன வயல்புதுவை யாண்டாள் அரங்கற்குப் *
பன்னு திருப்பாவைப் பல்பதியம் *—இன்னிசையால்
பாடிக் கொடுத்தாள்நற் பாமாலை பூமாலை *
சூடிக் கொடுத்தாளைச் சொல்லு. 10

சூடிக் கொடுத்த சுடர்க்கொடியே! தொல்பாவை
பாடி யருளவல்ல பல்வளையாய்! *—நாடிநீ
வேங்கடவர்க்கு என்னை விதியென்ற இம்மாற்றம் *
நாம்கடவா வண்ணமே நல்கு. 11

அல்லிநாள் தாமரைமே லாரணங்கி னின்துணைவி *
மல்லிநா டாண்ட மடமயில் *—மெல்லியலாள்
ஆயர் குலவேந்த னாகத்தாள் தென்புதுவை *
வேயர் பயந்த விளக்கு. 12

கட்டளைக்கலித்துறை

† [கோலச் சுரிசங்கை மாயன்செவ் வாயின் குணம்வினவும் *
சீலத்த னள்தென் திருமல்லி நாடி செழுங்குழல்மேல் *
மாலைத் தொடைதென் னரங்கருக் கீயும் மதிப்புடைய *
சோலைக் கிளியவள் தூயநற் பாதம் துணைநமக்கே.] 13

இருவிகற்ப நேரிசைவெண்பா

இன்னமுத மூட்டுகே னிங்கேவா பைங்கிளியே! *
தென்னரங்கம் பாடவல்ல சீர்ப்பெருமாள் *—பொன்னஞ்
சிலைசேர் நுதலியர்வேள் சேரலர்கோன் * எங்கள்
குலசே கரனென்றே கூறு. 14

கட்டளைக்கலித்துறை

ஆரம் கெடப்பர னன்பர்கொள் ளாரென்று, அவர்களுக்கே *
வாரங் கொடுகுடப் பாம்பில்கை யிட்டவன் * மாற்றலரை
வீரங் கெடுத்தசெங் கோல்கொல்லி காவலன் வில்லவர்கோன் *
சேரன் குலசே கரன்முடி வேந்தர்சி காமணியே. 15

கலிவிருத்தம்

தருச்சந்தப் பொழில்தழுவு தாரணியின் துயர்தீர
திருச்சந்த விருத்தம்செய் திருமழிசைப் பரன்வருமூர் *
கருச்சந்தும் காரகிலும் கமழ்கோங்கு மணநாறும் *
திருச்சந்தத் துடன்மருவு திருமழிசை வளம்பதியே. 16

---

† இத்தனியன் இந்த ப்ராந்தங்களில் அநுஸந்திப்பதில்லை.

இருவிகற்ப நேரிசைவெண்பா

உலகு மழிசையு முள்ளுணர்ந்து, தம்மில்
புலவர் புகழ்க்கோலால் தூக்க *—உலகுதன்னை
வைத்தெடுத்த பக்கத்தும், மாநீர் மழிசையே
வைத்தெடுத்த பக்கம் வலிது.

மற்றொன்றும் வேண்டா மனமே! மதிளரங்கர் *
கற்றினம் மேய்த்த கழலிணைக்கீழ் *—உற்ற
திருமாலை பாடும்சீர்த் தொண்ட ரடிப்பொடியெம்
பெருமானை * எப்பொழு தும் பேசு.

ஸ்லோகம்

தமேவமத்வாபர வாஸுதேவம்
ரங்கேஸயம் ராஜவதர்ஹணீயம்-
ப்ராபோதிகீம் யோக்ருத ஸூக்திமாலாம்
பக்தாங்க்ரிரேணும் பகவந்தமீடே.

இருவிகற்ப நேரிசைவெண்பா

மண்டங் குடியென்பர் மாமறையோர் மன்னியசீர் *
தொண்ட ரடிப்பொடி தொன்னகரம் *—வண்டு
திணர்த்தவயல் தென்னரங்கத் தம்மானை * பள்ளி
யுணர்த்தும் பிரானுதித்த வூர்.

ஸ்லோகம்

ஆபாதசூடமநுபூய ஹரிம்ஸயாநம்
மத்யேகவேரதுஹிதுர்முதிதாந்தராத்மா-
அத்ருஷ்டதாம் நயநயோர் விஷயாந்தராணாம்
யோநிஸ்சிகாய மநவை முநிவாஹநம்தம்.

கலிநிலைத்துறை

காட்டவே கண்டபாதம் கமலநல் லாடையுந்தி *
தேட்டரு முதரபந்தம் திருமார்பு கண்டம்செவ்வாய் *
வாட்டமில் கண்கண்மேனி முனியேறித் தனிபுகுந்து *
பாட்டினால் கண்டுவாழும் பாணர்தாள் பரவினோமே.

ஸ்லோகம்

அவிதிதவிஷயாந்தரஸ்ஸடாரே
ருபநிஷதாமுபகாநமாத்ரபோகஃ
அபிசகுணவஸாத்ததேகஸேஷீ
மதுரகவிர்ஹ்ருதயேமமாவிரஸ்து.

இருவிகற்ப நேரிசைவெண்பா

வேறொன்றும் நானறியேன் வேதம் தமிழ்செய்த *
மாறன் சடகோபன் வண்குருகூர்—ஏறு * எங்கள்

வாழ்வாமென் றேத்தும் மதுரகவி யார் * எம்மை
ஆள்வா ரவரே யரண். 24

### ஸ்லோகம்

கலயாமிகலித்வம்ஸம் கவிம் லோகதிவாகரம்
யஸ்ய கோபிஃ ப்ரகாஶாபி ராவித்யம் நிஹதம்தமஃ 25

### நேரிசைவெண்பா

வாழி பரகாலன் வாழி கலிகன்றி *
வாழி குறையலூர் வாழ்வேந்தன் *—வாழியரோ
மாயோனை வாள்வலியால் மந்திரங்கொள் மங்கையர்கோன் *
தூயோன் சுடர்மான வேல். 26

### கலித்துறை

நெஞ்சுக் கிருள்கடி தீபம் அடங்கா நெடும்பிறவி *
நஞ்சுக்கு நல்ல வமுதம் தமிழ்நன் னூல்துறைகள் *
அஞ்சுக் கிலக்கியம் ஆரண சாரம் * பரசமயப்
பஞ்சுக் கனலின் பொறிபர காலன் பனுவல்களே. 27

### நேரிசைவெண்பா

எங்கள் கதியே! இராமா நுசமுனியே! *
சங்கைகெடுத் தாண்ட தவராசா! *—பொங்குபுகழ்
மங்கையர்கோ னீந்த மறையா யிரமனைத்தும்
தங்குமனம் நீயெனக்குத் தா. 28

† [மாலைத் தனியே வழிபறிக்க வேணுமென்று
கோலிப் பதிவிருந்த கொற்றவனே—வேலை
அணைத்தருளுங் கையா லடியேன் வினையை
துணித்தருள வேணுந் துணிந்து.] 29

கைதைசேர் பூம்பொழில்சூழ் கச்சிநகர் வந்துதித்த *
பொய்கைப் பிரான்கவிஞர் போரேறு *—வையத்
தடியவர்கள் வாழ வருந்தமிழ்நூற் றந்தாதி *
படிவிளங்கச் செய்தான் பரிந்து. 30

என்பிறவி தீர விறைஞ்சினே னின்னமுதா *
அன்பே தகளியளித்தானை *—நன்புகழ்சேர்
சீதத்தார் முத்துக்கள் சேரும் * கடல்மல்லைப்
பூதத்தார் பொன்னங் கழல். 31

---

† இத்தனியன், சோமாசியாண்டான் அருளிச்செய்ததென்று சிலர் சொல்லுவார்கள். க்ரந்தஸ்தமாக ஆகாம் கண்டுகொள்வது. இத்தனியனை இந்த ப்ராந்தங்களில் அநுஸந்திப்பதில்லை,

சீராரு மாடத் திருக்கோவ லூரதனுள் *
காரார் கருமுகிலைக் காணப்புக்கு *—ஓராத்
திருக்கண்டே னென்றுரைத்த சீரான் கழலே *
உரைக்கண்டாய் நெஞ்சே உகந்து.

நாரா யணன்படைத்தான் நான்முகனை * நான்முகனுக்கு
ஏரார் சிவன்பிறந்தா னென்னும்சொல் *—சீரார்
மொழிசெப்பி வாழலாம் நெஞ்சமே! * மொய்பூ
மழிசைப் பரனடியே வாழ்த்து.

கட்டளைக்கலித்துறை

கருவிருத் தக்குழி நீத்தபின் காமக் கடுங்குழி வீழ்ந்து *
ஒருவிருத் தம்புக் குழலுறு வீருயி ரின்பொருள்கட்கு *
ஒருவிருத் தம்புகு தாமல் குருகையர் கோனுரைத்த *
திருவிருத் தத்தோ ரடிகற்றி ரீர்திரு நாட்டகத்தே.

கலிவிருத்தம்

காசினியோர் தாம்வாழக் கலியுகத்தே வந்துதித்து *
ஆசிரியப் பாவதனு லருமறைநூல் விரித்தானை *
தேசிகனைப் பராங்குசனைத் திகழ்வகுளத் தாரானை *
மாசடையா மனத்துவைத்து மறவாமல் வாழ்த்துதுமே.

நேரிசைவெண்பா

முந்துற்ற நெஞ்சே! முயற்றித் தரித்துரைத்து *
வந்தித்து வாயார வாழ்த்தி *—சந்த
முருகூரும் சோலைசூழ் மொய்பூம் பொருநல்
குருகூரன் மாறன்பேர் கூறு.

‡ வாழி பரகாலன் வாழி கலிகன்றி *
வாழி குறையலூர் வாழ்வேந்தன் *—வாழியரோ
மாயோனை வாள்வலியால் மந்திரங்கொள் மங்கையர்கோன் *
தூயோன் சுடர்மான வேல்.

கலித்துறை

† [சீரார் திருவெழு கூற்றிருக் கையென்னும் செந்தமிழாற்
ஆரா வமுதங் குடந்தைப் பிரான்ற னடியிணைக்கீழ்
ஏரார் மறைப்பொரு ளெல்லா மெடுத்திவ் வுலகுய்யவே
சோராமற் சொன்ன வருள்மாரி பாதம் துணைநமக்கே.]

‡ இத்தனியன் பெரியதிருமொழியிலும், திருவெழுகூற்றிருக்
சேர்க்கப்பட்டுள்ளதாதலால் இங்கும் அவ்வாறே சேர்க்கலாயிற்று.

† இத்தனியன் இந்த ப்ராந்தங்களில் வழங்குவதில்லை.

நேரிசைவெண்பா

முள்ளிச் செழுமலரோ தாரான் முளைமதியம் *
கொள்ளிக்கெ னுள்ளம் கொதியாமே *—வள்ளல்
திருவாளன் சீர்க்கலியன் கார்க்கலியை வெட்டி *
மருவாளன் தந்தான் மடல். 39

பொன்னுலகில் வானவரும் பூமகளும் போற்றிசெய்யும் *
நன்னுதலீர்! நம்பி நறையூரர் *—மன்னுலகில்
என்னிலைமை கண்டு மிரங்காரே யாமாகில் *
மன்னுமட லூர்வன் வந்து. 40

**ஸ்லோகம்**

பக்தாம்ருதம்விச்வஜநாநுமோதநம்
ஸர்வார்த்ததம்ஸ்ரீசடகோபவாங்மயம்-
ஸஹஸ்ரசாகோபநிஷத்ஸமாகமம்
நமாம்யஹம்த்ராவிடவேதஸாகரம். 41

நேரிசைவெண்பா

திருவழுதி நாடென்றும் தென்குருகூ ரென்றும் *
மருவினிய வண்பொருந லென்றும் *—அருமறைகள்
அந்தாதி செய்தா னடியிணையே யெப்பொழுதும் *
சிந்தியாய் நெஞ்சே! தெளிந்து. 42

மனத்தாலும் வாயாலும் வண்குருகூர் பேணும் *
இனத்தாரை யல்லா திறைஞ்சேன் *—தனத்தாலும்
ஏதுங் குறையில்லேன் * எந்தை சடகோபன்
பாதங்கள் யாமுடைய பற்று. 43

ஏய்ந்த பெருங்கீர்த்தி யிராமா நுசமுனிதன் *
வாய்ந்த மலர்ப்பாதம் வணங்குகின்றேன் *—ஆய்ந்தபெருஞ்
சீரார் சடகோபன் செந்தமிழ்வே தம்தரிக்கும் *
பேராத வுள்ளம் பெற. 44

வான்திகழும் சோலை மதிளரங்கர் வண்புகழ்மேல் *
ஆன்ற தமிழ்மறைக ளாயிரமும் *—ஈன்ற
முதல்தாய் சடகோபன் மொய்ம்பால் வளர்த்த *
இதத்தாய் இராமா நுசன். 45

மிக்க விறைநிலையும் மெய்யா முயிர்நிலையும் *
தக்க நெறியும் தடையாகித்—தொக்கியலும் *
ஊழ்வினையும் வாழ்வினையு மோதும் குருகையர்கோன் *
யாழினிசை வேதத் தியல். 46

**நாலாயிரத்தனியன்கள் ஸம்பூர்ணம்.**

ஸ்ரீ

# இராமாநுஜ நூற்றந்தாதியின் தனியன்கள்

நேரிசை வெண்பா

முன்னை வினையகல மூங்கிற் குடியமுதன் *
பொன்னங் கழற்கமலப் போதிரண்டும் *—என்னுடைய
சென்னிக் கணியாகச் சேர்த்தினேன், தென்புலத்தார்க்கு *
என்னுக் கடவுடையேன் யான். 1

கலித்துறை

நயந்தரு பேரின்ப மெல்லாம் பழுதென்று நண்ணினர்பால் *
சயந்தரு கீர்த்தி யிராமா நுசமுனி தாளிணைமேல் *
உயர்ந்த குணத்துத் திருவரங் கத்தமுது ஓங்கும் * அன்பால்
இயம்பும் கலித்துறை யந்தாதி யோத விசைநெஞ்சமே! 2

* [இனியென் குறைநமக் கெம்பெரு மானார் திருநாமத்தினால்
முனிதந்த நூற்றெட்டுச் சாவித் திரியென்னு நுண்பொருளை
கவிதந்த செஞ்சொல் கலித்துறை யந்தாதி பாடித்தந்தான்
புனிதன் திருவரங் கத்தமு தாகிய புண்ணியனே.] 3

சொல்லின் தொகைகொண் டுனதடிப்போதுக்குத் தொண்டு செய்யும்
நல்லன்ப ரேத்துமுன் நாமமெல்லாம் என்தன் நாவினுள்ளே *
அல்லும் பகலு மமரும் படிநல்கு அறுசமயம் *
வெல்லும் பரம! இராமா நுச! இதுஎன் விண்ணப்பமே. 4

---

* இத்தனியன் திருநாராயணபுரம் முதலான மேனாட்டு திவ்யதேசங்களில் அநுஸந்திப்பதாகத் தெரிகிறது.

ஸ்ரீ



ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

ஸ்ரீமதே வேதாந்த குரவே நம:

# தேசிகப்ரபந்தம்

## தனியன்கள்

**ப்ரம்மதந்த்ர ஸ்வதந்த்ர ஜீயர் அருளிச்செய்தது**

ராமாநுஜதயாபாத்ரம் ஜ்ஞாநவைராக்யபூஷணம்
ஸ்ரீமத்வேங்கடநாதார்யம் வந்தே வேதாந்ததேசிகம்.

**பிள்ளைலோகாசார்யர் அருளிச்செய்தது**

நேரிசைவெண்பா

சீரொன்று தூப்புல் திருவேங் கடமுடையான் *
பாரொன்றச் சொன்ன பழமொழியுள் *—ஓரொன்று
தானே யமையாதோ தாரணியில் வாழ்வார்க்கு *
வானேறப் போமளவும் வாழ்வு.

எண்சீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்

† என்னுயிர்தந் தளித்தவரைச் சரணம் புக்கி
யானடைவே யவர்குருக்கள் நிரைவணங்கிப் *
பின்னருளால் பெரும்பூதூர் வந்த வள்ளல்
பெரியநம்பி யாளவந்தார் மணக்கால் நம்பி *
நன்னெறியை யவர்க்குரைத்த வுய்யக் கொண்டார்
நாதமுனி சடகோபன் சேனை நாதன் *
இன்னமுதத் திருமகளென் றிவரை முன்னிட்டு
எம்பெருமான் திருவடிக ளடைகின் றேனே.

---

† இது இப்பிரபந்தத்துள்ள அதிகாரஸங்க்ரஹத்தில் மூன்றாவது பாசுரம். "ஆசார்யர்கள் திருவடிகளை பஜித்துப் பின்னர் பகவான் திருவடிகளை பஜிக்கிறேன்" என்னுங் கருத்தமைந்துள்ளதால் வ்யாக்யாநாதிகாரி இப்பாசுரத்தை ப்ரபந்தத்தின் ப்ரதமத்திலுஞ் சேர்த்து வ்யாக்யாநத்திற் பதிப்பித்துள்ளதுபோல் பதிப்பிக்கலாயிற்று.

முதலாவது

# அமிர்தரஞ்சநி

கட்டளைக்கலித்துறை

⁂ தம்பர மென்றிரங் கித்தள ராமனந் தந்தருளால் *
உம்பர் தொழுந்திரு மாலுகந் தேற்கு முபாயமொன்றால் *
நம்பிற வித்துயர் மாற்றிய ஞானப் பெருந்தகவோர் *
சம்பிர தாயமொன் றிச்சதிர்க் குந்நெறி சார்ந்தனமே. 1

அகவல்

கடலமு தத்தைக் கடைந்து சேர்த்த திருமால் *
அடிகாட் டியநம் தேசிகரைச் சேர்ந்தோம். 2

குறள் வெண்பா

முத்திக் கருள்சூட மூன்றைத் தெளிமுன்னம் *
இத்திக்கா லேற்கு மிதம். 3

மூன்றி லொருமூன்று மூவிரண்டு முந்நான்கும் *
தோன்றத் தொலையுந் துயர். 4

நேரிசைவெண்பா

உயிரு முடலு முடலாக வோங்கித் *
தயிர்வெண்ணெய் தாரணியோ டுண்டான் *—பயிரில்
களைபோ லசுரரைக் காய்ந்தான்தன் கையில் *
வளைபோலெம் மாசிரியர் வாக்கு. 5

கட்டளைக்கலித்துறை

அலையற்ற வாரமு தக்கட லக்கட லுண்டமுகில் *
விலையற்ற நன்மணி வெற்பு வெயினில வோங்கும் * பகல்
துலையொத் தனவென்பர் தூய்மறை சூடுந்துழாய் முடியார்க்கு *
இலையொத் தனவவன் பாதம் பணிந்தவ ரெண்ணுதற்கே. 6

நேரிசைவெண்பா

உத்தி திகழு முறைமூன்றின் மும்மூன்றும் *
சித்த முணரத் தெளிவித்தார் *—முத்திதரும்
மூல மறையின் முடிசேர் முகில்வண்ணர் *
சீல மறிவார் சிலர். 7

---

⁂ இக்குறியிட்டுள்ள பாசுரங்கள் இரட்டித்துச் சேவிக்குமவை.

எண்சீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்

எனக்குரிய னெனதுபர மென்பே றென்னாது
இவையனைத்து மிறையில்லா விறைக்க டைத்தோம் *
தனக்கிணையொன் றில்லாத திருமால் பாதஞ்
சாதனமும் பயனுமெனச் சலங்கள் தீர்த்தோம் *
உனக்கிதமென் றொருபாக னுரைத்த துற்றோம்
உத்தமனு மவனுதவி யெல்லாங் கண்டோம் *
இனிக்கவரு மவைகவர விகந்தோஞ் சோகம்
இமையவரோ டொன்றினிநா மிருக்கு நாளே. 8

நேரிசைவெண்பா

தத்துவங்க ளெல்லாந் தகவா லறிவித்து *
முத்தி வழிதந்தார் மொய்கழலே *—அத்திவத்தில்
ஆரமுத மாரு மிருநிலத்தி லென்றுரைத்தார் *
தாரமுத லோதுவித்தார் தாம். 9

கட்டளைக்கலித்துறை

திருநா ரணனென்னுந் தெய்வமுஞ் சித்து மசித்துமென்னும் *
பெருநான் மறைமுடி பேசிய தத்துவ மூன்றிவைகேட்டு *
ஒருநா ளுணர்ந்தவ ருய்யும் வகையன்றி யொன்றுகவார் *
இருநா லெழுத்தி னிதயங்க ளோதிய வெண்குணரே. 10

எண்சீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்

காரணமா யுயிராகி யனைத்துங் காக்குங்
கருணைமுகில் கமலையுட னிலங்கு மாறும் *
நாரணனார் வடிவான வுயிர்க ளெல்லாம்
நாம்வென்று நல்லடிமைக் கேற்கு மாறும் *
தாரணிநீர் முதலான மாயை காலந்
தனிவானென் றிறையுருவாந் தன்மை தானும் *
கூரணிசீர் மதியுடைய குருக்கள் காட்டக்
குறிப்புடனுங் கண்டவகை கூறி னோமே. 11

நேரிசைவெண்பா

அப்படி நின்ற வமலன் படியெல்லாம் *
இப்படி யெம்முள்ளத் தெழுதினார் *—எப்படியும்
ஓரார் சுருதி யொளியா விருள்நீக்கும் *
தாரா பதியனையார் தாம். 12

கட்டளைக்கலித்துறை

செம்பொற் கழலிணைச் செய்யா ளமரும் திருவரங்கர் *
அன்பர்க் கடியவ ராயடி சூடிய நாமுரைத்தோம் *
இன்பத் தொகையென வெண்ணிய மூன்றி னெழுத்தடைவை *
ஐம்பத் தொருபொரு ளாருயிர்க் காக்கு மழுதெனவே. 13

யானறி யுஞ்சுட ராகிநின் றேன்மற்றும் யாதுமல்லேன் *
வானம ருந்திரு மாலடி யேன்மற்றோர் பற்றுமிலேன் *
தானமு தாமவன் தன்சர ணேசர ணென்றடைந்தேன் *
மானமி லாவடி மைப்பணி பூண்ட மனத்தினனே. 14

சீலங் கவர்ந்திடுந் தேசிகர் தேசின் பெருமையினல் *
ஆலங்க ளன்ன துரிதங்கள் மாய்ந்தன துஞ்சல்தரும் *
கோலங் கழிந்திடக் கூறிய காலங் குறித்துநின்றோம் *
மேலிங்கு நாம்பிற வோம்வேலை வண்ணனை மேவுதுமே. 15

வண்மை யுகந்த வருளால் வரந்தரு மாதவனர் *
உண்மை யுணர்ந்தவ ரோதிவிக் கின்ற வுரைவழியே *
திண்மை தருந்தெளி வொன்றால் திணியிருள் நீங்கியநாம் *
தண்மை கழிந்தனந் தத்துவங் காணுந் தரத்தனமே. 16

நாரா யணன்பர னமவ னுக்கு நிலையடியோம் *
சோரா தனைத்து மவனுடம் பென்னுஞ் சுருதிகளால் *
சீரார் பெருந்தகைத் தேசிக ரெம்மைத் திருத்துதலால் *
தீரா மயலகற் றுந்திறம் பாத்தெளி வுற்றனமே. 17

ஒன்றே புகலென் றுணர்ந்தவர் காட்டத் திருவருளால் *
அன்றே யடைக்கலங் கொண்டநம் மத்தி கிரித்திருமால் *
இன்றே யிசையி லிணையடி சேர்ப்பர் இனிப்பிறவோம் *
நன்றே வருவதெல் லாநமக் குப்பர மொன்றிலதே. 18

எண்சீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்

சிறுபயனிற் படியாத தகவோ ரெம்மைச்
சேர்க்கவடைக் கலங்கொண்ட திருமால் தானே *
மறுபிறவி யறுத்தழியா வானில் வைக்கும்
மனமேநீ மகிழாதே யிருப்ப தென்கொல் *
உறுவதுனக் குரைக்கேனிங் கிருந்த காலம்
ஒருபிழையும் புகுதாத வுணர்த்தி வேண்டிப் *
பெறுவதெல்லா மிங்கேநாம் பெற்று வாழப்
பேரடிமை யார்க்கென் றிகழேல் நீயே. 19

கட்டளைக்கலித்துறை

சாக்கியர் சைனர்கள் சார்வாகர் சாங்கியர் சைவர் * மற்றும்
தாக்கிய நூல்கள் சிதையத் தனிமறை யின்கருத்தை *
வாக்கிய முப்பதி லுல்வகை செய்து வியாகரித்தோம் *
தேக்கி மனத்தி லிதனைத் திணியிருள் நீங்குமினே. 20

தள்ளத் துணியினுந் தாய்போ லிரங்குந் தனித்தகவால் *
உள்ளத் துறைகின்ற வுத்தமன் தன்மை யுணர்ந்துரைத்தோம் *
முள்ளொத்த வாதிகள் முன்னே வரினெங்கள் முக்கியர்பால் *
வெள்ளத் திடையில் நரிபோல் விழிக்கின்ற வீணர்களே. 21

செய்யேல் மறமென்று தேசிகன் தாதை யவனுரைத்த *
மெய்யே யருள்பொருள் சூடிய வெண்மதி காதலியாம் *
பொய்யே பகைப்புல னையிரண் டொன்று பொருங்கருவி *
கையேறு சக்கரக் காவலன் காவ லடைந்தவர்க்கே. 22

ஆசிரியச்சந்தவிருத்தம்

அந்தமிலாதிதேவனழிசெய்தடைந்தவலைவேலையோதமடையச் *
செந்தமிழ்நால்வகுத்தசிறுமாமணிசர்சிறுகைச்சிறுங்கைமறைபோல் *
பந்தமெலாமுரைப்பதிதுவென்றுதங்களிதயத்தடக்கியடையும் *
பந்தமெலாமறுத்தருள்தந்துகந்துபரவும்பொருள்களிவையே. 23

கட்டளைக்கலித்துறை

முக்குண மாயையின் மூவெட்டின் கீழ்வரு மூவகையும் *
இக்குண மின்றி யிலங்கிய காலச் சுழியினமும் *
நற்குண மொன்றுடை நாகமு நாரா யணனுடம்பாய்ச் *
சிற்குண மற்றவை யென்றுரைத் தாரெங்கள் தேசிகரே. 24

நேரிசைவெண்பா

எனதென் பதுமியா னென்பது மன்றித் *
தனதென்று தன்னையுங் காணு *—துனதென்று
மாதவத்தால் மாதவற்கே வன்பரமாய் மாய்ப்பதனில் *
கைதவத்தான் கைவளரான் காண். 25

கட்டளைக்கலித்துறை

பல்வினை வன்கயிற் றுல்பந்த முற்றுழல் கின்றனரும் *
நல்வினை மூட்டிய நாரண னார்பதம் பெற்றவரும் *
தொல்வினை யொன்றுமில் லாச்சோதி வானவ ருஞ்சுருதிச் *
சொல்வினை யோர்ந்தவர் சீவரென் றேதச் சிறந்தனரே. 26

நேரிசைவெண்பா

ஆரணங்க ளெல்லா மடிசூடி மேல்நின்ற *
காரணமா யொன்றாற் கலங்காதான்—நாரணனே *
நம்மேல் வினைகடியும் நல்வழியில் தானின்று *
தன்மேனி தந்தருளுந் தான். 27

கட்டளைக்கலித்துறை

குடல்மிசை யொன்றியுங் கூடியும் நின்ற கொடுந்துயரும் *
உடல்மிசை தோன்று முயிரு முயிர்க்குயி ராமிறையும் *
கடல்மிசை கண்டவை தானத் திரளவை போர்த்தபொன்னூல் *
மடல்மிசை வார்த்தை யதன்பொரு ளென்ன வகுத்தனமே. 28

தத்துவந் தன்னில் விரித்திடத் தோன்று மிரண்டுதன்னில்
பத்தி விலக்கிய பாடண்டர் வீசுறும் பாசமுற்றர் *
எத்திசை யுந்தொழு தேத்திய கீர்த்திய ரெண்டிசையால் *
சுத்த ருரைத்த சுளக மறிந்தவத் தூயவரே. 29

வினைத்திரள் மாற்றிய வேதியர் தந்தநல் வாசகத்தால் *
அனைத்து மறிந்தபி னுறும் பயனு மெனவடைந்தோம் *
மனத்தி லிருந்து மருத்தமு தாகிய மாதவனார் *
நினைத்தன் மனத்தி லரிதாகி நின்றன நீள்கழலே. 30

நேரிசைவெண்பா

ஓதுமுறை நான்கதனி லோங்குமொரு மூன்றினுள்ளே *
நீதிநெறி வழுவா நிற்கின்றோம் *—போதமரும்
பேரா யிரமுந் திருவும் பிரியாத *
நாரா யணனருளால் நாம். 31

ஆசிரியவிருத்தம்

ஊன்தந்து நிலைநின்ற வுயிருந் தந்தோர்
உயிராகி யுள்ளொளியோ டுறைந்த நாதன் *
தான்தந்த வின்னுயிரை யெனதென் னுமல்
நல்லறிவுந் தந்தகலா நலமுந் தந்து *
தான்தந்த நல்வழியால் தாழ்ந்த வென்னைத்
தன்றனக்கே பரமாகத் தானே யெண்ணி *
வான்தந்து மலரடியுந் தந்து வானோர்
வாழ்ச்சிதர மன்னருளால் வரித்திட் டானே. 32

நேரிசை வெண்பா

திருமா லடியிணையைத் தின்சரணு கக்கொண்டு *
திருமா லடியிணையே சேர்வார் *—ஒருமால்

அருளா லுருளாத வானோர்கள் வாழ்ச்சி *
யருளால் நமக்களித்தா ராய்ந்து. 33

கட்டளைக் கலித்துறை

சேர்க்குந் திருமகள் சேர்த்தியில் மன்னுதல் சீர்ப்பெரியோர்க்கு *
ஈர்க்குங் குணங்க ளிலக்காம் வடிவி லிணையடியைப் *
பார்க்குஞ் சரணத்திற் பற்றுதல் நன்னிலை நாம்பெறும்பேறு *
ஏற்கு மவற்றினு ளெல்லாங் களையற வெண்ணினமே. 34

திருமா லடியிணை சேர்ந்து திகழ்ந்த வடிமைபெறத் *
திருநா ரணன்சர ண்திண்சர ணாகத் துணிந்தடைவோர் *
ஒருநா ளுரைக்க வுயிர்தரு மந்திர மோதியநாம் *
வருநாள் பழுதற்று வாழும் வகையதில் மன்னுவமே. 35

நேரிசை வெண்பா

மற்றோர்பற் றின்றி வந்தடைந்தார்க் கெல்லாம் *
குற்ற மறியாத கோவலனார் *—மற்றும்
வினைவிடுத்து விண்ணவரோ டொன்ற விரைகின்றார் *
நினைவுடைத்தாய் நீமனமே நில்லு. 36

கட்டளைக் கலித்துறை

எல்லாத் தருமமு மென்னை யிகழ்ந்திடத் தானிகழாது *
எல்லாந் தனதென வெல்லா முகந்தருள் தந்தபிரான் *
கல்லார் மதக்களி றொத்த வினைத்திரள் மாய்ப்பனென்ற *
சொல்லா லினியொரு காற்சோகி யாத்துணி வுற்றனமே. 37

வினைத்திரள் மாற்றிய வேதியர் தந்தருள் வாசகத்தால் *
அனைத்து மறிந்தபி னாறும் பயனு மெனவடைந்தோம் *
மனத்தி லிருந்து மருந்தமு தாகிய மாதவனார் *
நினைத்தல் மனத்தி லரிதாகி நின்றன நீள்கழலே. 38

சந்தவிருத்தம்

✠ எட்டிலா றிரண்டிலொன் றிலங்குமா றியம்புவார் *
விட்டவாறு பற்றுமாறு வீடுகண்டு மேவுவார் *
சிட்டரான தேசயர்ந்த தேசிகர்க் குயர்ந்துமேல் *
எட்டுமூன்று மூடறுத்த தெந்தைமா லிரக்கமே. 39

அடிவரவு:—தம்பரம், கடல், முத்தி, மூன்றில், உயிர், அலையற்ற, உத்திதிகழ், எனக்கு, தத்துவங்கள், திருநாரணன், காரணம், அப்படி, செம்பொன், யானறியும், சிலங்கவர்ந்திடும், வண்மை, நாராயணன், ஒன்றே புகல், சிறுபயனில், சாக்கியர், தள்ள, செய்யேல், அந்தமில், முக்குணம், எனதென்பது, பல்வினை, ஆரணம், குடல்மிசை, தத்துவம், வினைத்திரள், ஓதுமுறை, ஊன்தந்து, திருமாலடியிணை, சேர்க்கும், திருமால், மற்றோர், எல்லாத்தருமம், வினைத்திரள், எட்டில். (பொய்கை)

மாயாவாத புஜங்க பங்க கருடாயநமஃ
தேசிகர் திருவடிகளே சரணம்.
ப்ரபந்தம் 1-க்கு பாசுரம்-39

**அமிர்தரஞ்சநி ஸம்பூர்ணம்.**

# இரண்டாவது

# அதிகாரஸங்கிரஹம்

## தனியன்

ஸ்ரீஸாக்ஷாத் ஸ்வாமியென்கிற
ஸ்ரீவேதாந்த ராமானுஜஸ்வாமி அருளிச்செய்தது

* ஸ்ரீரங்கநாத குரு பாத ஸரோஜ ஹம்ஸம்
வேதாந்த தேசிக பதாம்புஜ ப்ருங்க ராஜம்-
ஸ்ரீமத் யதீந்த்ர சடகோப தயாவலம்பம்
வேதாந்த லக்ஷ்மண முநிம் சரணம் ப்ரபத்யே.

எண்சீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்

பொய்கைமுனி பூதத்தார் பேயாழ் வார்தண்
பொருநல்வருங் குருகேசன் விட்டு சித்தன் *
துய்யகுல சேகரனம் பாண நாதன்
தொண்டரடிப் பொடிமழிசை வந்த சோதி *
வையமெலா மறைவிளங்க வாள்வே லேந்து
மங்கையர்கோ னென்றிவர்கள் மகிழ்ந்து பாடும் *
செய்யதமிழ் மாலைகள்நாம் தெளிய வோதித்
தெளியாத மறைநிலங்கள் தெளிகின் றோமே. 1

இன்பத்தி லிறைஞ்சுதலி லிசையும் பேற்றில்
இகழாத பல்லுறவி லிராக மாற்றில் *
தன்பற்றில் வினைவிலக்கிற் றகவோக் கத்தில்
தத்துவத்தை யுணர்த்துதலில் தன்மை யாக்கில் *
அன்பர்க்கே யவதரிக்கு மாயனிற்க
அருமறைகள் தமிழ்செய்தான் தாளே கொண்டு *
துன்பற்ற மதுரகவி தோன்றக் காட்டும்
தொல்வழியே நல்வழிகள் துணிவார் கட்கே. 2

என்னுயிர்தந் தளித்தவரைச் சரணம் புக்கி
யானடைவே யவர்குருக்கள் நிரை வணங்கிப் *
பின்னருளால் பெரும்பூதூர் வந்த வள்ளல்
பெரியநம்பி யாளவந்தார் மணக்கால் நம்பி *

---

* இத்தனியன் ஸ்ரீஸ்வாதினியிலிருந்தெடுத்து சேர்க்கப்பட்டது.

நன்னெறியை யவர்க்குரைத்த வுய்யக் கொண்டார்
நாதமுனி சடகோபன் சேனை நாதன் *
இன்னமுதத் திருமகளென் றிவரை முன்னிட்டு
எம்பெருமான் திருவடிக ளடைகின் றேனே. 3

கட்டளைக் கலித்துறை

ஆரண நூல்வழிச் செவ்வை யழித்திடு மைதுகர்க்கோர் *
வாரண மாயவர் வாதக் கதலிகள் மாய்த்தபிரான் *
ஏரணி கீர்த்தி யிராமாநுசமுனி யின்னுரைசேர் *
சீரணி சிந்தையி னோஞ்சிந்தி யோமினித் தீவினையே. 4

நீளவந் தின்று விதிவகை யால்நினை வொன்றியநாம் *
மீளவந் தின்னும் வினையுடம் பொன்றி விழுந்துழலாது *
ஆளவந் தாரென வென்றருள் தந்தும் விளங்கியசீர் *
ஆளவந் தாரடி யோம்படி யோமி னியல்வழக்கே. 5

காளம் வலம்புரி யென்னநற் காத லடியவர்க்குத் *
தாளம் வழங்கித் தமிழ்மறை யின்னிசை தந்தவள்ளல் *
மூளுந் தவநெறி மூட்டிய நாத முனிகழலே *
நாளுந் தொழுதெழு வோம்நமக் கார்நிகர் நானிலத்தே. 6

⁂ ஆரு மடைக்கல மென்றெம்மை யம்புயத் தாள்கணவன் *
தாளிணை சேர்ந்தெமக் கும்மவை தந்த தகவுடையார் *
மூளு மிருட்கள் விளமுயன் றோதிய மூன்றினுள்ளம் *
நாளு முகக்கவிங் கேநமக் கோர்விதி வாய்க்கின்றதே. 7

[இதுமுதல் அந்தாதித்தொடை]

⁂ திருவுடன் வந்த செழுமணி போல்திரு மாலிதயம் *
மருவிட மென்ன மலரடி சூடும் வகைபெறுநாம் *
கருவுடன் வந்த கடுவினை யாற்றில் விழுந்துழலாது *
அருவுட னைந்தறி வாரருள் செய்ய வமைந்தனரே. 8

அமையா விவையென்னு மாசையி னாலறு மூன்றுலகில் *
சுமையான கல்விகள் சூழவந் தாலுந் தொகையிவையென்று *
இமையா விமையவ ரேத்திய வெட்டிரண் டெண்ணிய * நம்
சமையா சிரியர் சதிர்க்குந் தனிநிலை தந்தனரே. 9

நிலைதந்த தாரக னுய்நிய மிக்கு மிறைவனுமாய் *
இலதொன் றிலாவகை யெல்லாம் தனதெனு மெந்தையுமாய்த் *
துலையொன் றிலையென நின்ற துழாய்முடி யானுடம்பாய் *
விலையின்றி நாமடி யோமென்று வேதியர் மெய்ப்பொருளே. 10

பொருளொன் றெனநின்ற பூமகள் நாத னவனடிசேர்ந்து *
அருளொன்று மன்ப னவன்கொ ளுபாய மமைந்தபயன் *
மருளொன் றியவினை வல்விலங் கென்றிவை யைந்தறிவார் *
இருளொன் றிலாவகை யென்மனந் தேற வியம்பினரே.

தேற வியம்பினர் சித்து மசித்து மிறையுமென *
வேறு படும்வியன் தத்துவ மூன்றும் வினையுடம்பில் *
கூறு படுங்கொடு மோகமுந் தானிறை யாங்குறிப்பும் *
மாற நினைந்தரு ளால்மறை நூல்தந்த வாதியரே.

வாதியர் மன்னுந் தருக்கச் செருக்கின் மறைகுலையச் *
சாது சனங்க ளடங்க நடுங்கத் தனித்தனியே *
ஆதியெ ணுவகை யாரண தேசிகர் சாற்றினர் * நம்
போத மருந்திரு மாதுட னின்ற புராணனையே.

நின்ற புராண னடியிணை யேந்து நெடும்பயனும் *
பொன்றுத லேநிலை யென்றிடப் பொங்கும் பவக்கடலும் *
நன்றிது தீயதி தென்று நவின்றவர் நல்லருளால் *
வென்று புலன்களை வீடிடை வேண்டும் பெரும்பயனே.

வேண்டும் பெரும்பயன் வீடென் றறிந்து விதிவகையால் *
நீண்டுங் குறுகியு நிற்கு நிலைகளுக் கேற்குமன்பர் *
மூண்டொன்றின் மூல வினைமாய்த் துதலின் முகுந்தனடி
பூண்டன்றி * மற்றோர் புகலொன் றிலையென நின்றனரே.

நின்ற நிலைக்குற நிற்குங் கருமமு நேர்மதியால் *
நன்றென நாடிய ஞானமு நல்குமுட் கண்ணுடையார் *
ஒன்றிய பத்தியு மொன்றுமி லாவிரை வார்க்கு * அருளால்
அன்று பயன்தரு மாறு மறிந்தவ ரந்தணரே.

அந்தண ரந்திய ரெல்லையி னின்ற வனைத்துலகும் *
நொந்தவ ரேமுத லாக நுடங்கிய நன்னியராய் *
வந்தடை யும்வகை வண்டக வேந்தி வருந்திய * நம்
அந்தமி லாதியை யன்ப ரறிந்தறி வித்தனரே.

அறிவித் தனரன் பரையம் பறையு முபாயமில்லாத் *
துறவித் துணியிற் றுணையாம் பரனை வரிக்கும்வகை *
உறவித் தனையின்றி யொத்தா ரெனநின்ற வும்பரைநாம் *
பிறவித் துயர்செகு வீரென் றிருக்கும் பிழையறவே.

அறவே பரமென் றடைக்கலம் வைத்தன ரன்றுநம்மைப் *
பெறவே கருதிப் பெருந்தகவுற்ற பிரானடிக்கீழ் *
உறவே யிவனுயிர் காக்கின்ற வோருயி ருண்மையை * நீ
மறவே லெனநம் மறைமுடி சூடிய மன்னவரே. 19

மன்னவர் விண்ணவர் வானோ ரிறையொன்றும் வான்கருத்தோர் *
அன்னவர் வேள்வி யனைத்து முடித்தன ரன்புடையார்க்கு *
என்ன வரந்தர வென்றுநம் மத்தி கிரித்திருமால் *
முன்னம் வருந்தி யடைக்கலங் கொண்டநம் முக்கியரே. 20

முக்கிய மந்திரங் காட்டிய மூன்றி னிலையுடையார் *
தக்கவை யன்றித் தகாதவை யொன்றுந் தமக்கிசையார் *
இக்கரு மங்க ளமக்குள வென்னு மிலக்கணத்தால் *
மிக்க வுணர்த்தியர் மேதினி மேவிய விண்ணவரே. 21

விண்ணவர் வேண்டி விலக்கின்றி மேவு மடிமையெல்லாம் *
மண்ணுல கத்தின் மகிழ்ந்தடை கின்றனர் வண்டுவரைக் *
கண்ண னடைக்கலங் கொள்ளக் கடன்கள் கழற்றிய * நம்
பண்ண மருந்தமிழ் வேத மறிந்த பகவர்களே. 22

வேத மறிந்த பகவர் வியக்க விளங்கியசீர் *
நாதன் வகுத்த வகைபெரு நாமவ னல்லடியார்க்கு *
ஆதர மிக்க வடிமை யிசைந்தழி யாமறைநூல் *
நீதி நிறுத்தி நிலைகுலை யாவகை நின்றனமே. 23

நின்றன மன்புடை வானோர் நிலையி னிலமளந்தான் *
நன்றிது தீயதி தென்று நடத்திய நான்மறையால் *
இன்று நமக்கிர வாதலி லிம்மதி யின்னிலவே
அன்றி * யடிக்கடி யாரிருள் தீர்க்க வடியுளதே. 24

உளதான வல்வினைக் குள்ளம் வெருவி யுலகளந்த *
வளர்தா மரையிணை வண்சரணாக வரித்தவர் தாம் *
களைதா னெனவெழுங் கன்மந் துறப்பர் துறந்திடினும் *
இளைதா நிலைசெக வெங்கள் பிரானருள் தேனெழுமே. 25

⁂ தேனார் கமலத் திருமகள் நாதன் திகழ்ந்துறையும் *
வானா டுகந்தவர் வையத் திருப்பிடம் வன்றருமக் *
கானா ரிமயமுங் கங்கையுங் காவிரி யுங்கடலும் *
நானா நகரமும் நாகமுங் கூடிய நன்னிலமே. 26

நன்னில மாமது நற்பக லாமது நன்னிமித்தம் *
என்னலு மாமது யாதா மரங்க ரடியவர்க்கு *
மின்னிலை மேனி விடும்பய ணத்து விலக்கிலதோர் *
நன்னிலை யாநடு நாடி வழிக்கு நடைபெறவே.

நடைபெற வங்கிப் பகலொளி நாளுத்த ராயணமாண்டு *
இடைவரு காற்றிர வியிர வின்பதி மின்வருணன் *
குடையுடை வானவர் கோமான்பிர சாபதி யென்றிவரால் *
இடையிடை போகங்க ளெய்தி யெழிற்பத மேறுவரே.

ஏறி யெழிற்பத மெல்லா வுயிர்க்கு மிதமுகக்கும் *
நாறு துழாய்முடி நாதனை நண்ணி யடிமையினம் *
கூறு கவர்ந்த குருக்கள் குழாங்கள் குரைகழற்கீழ் *
மாறுத லின்றி மகிழ்ந்தெழும் போகத்து மன்னுவமே.

மன்னு மனைத்துற வாய்மருள் மாற்றரு ளாழியுமாய்த் *
தன்னினை வாலனைத் துந்தரித் தோங்குந் தனியிறையாய் *
இன்னமு தத்தமு தாலிரங் குந்திரு நாரணனே *
மன்னிய வன்சரண் மற்றோர்பற் றின்றி வரிப்பவர்க்கே.

வரிக்கின்ற நன்பரன் யாவரை யென்னு மறையதனில் *
விரிக்கின்ற துங்குறி யொன்றால் வினையரை யாதலினும் *
உரைக்கின்ற நன்னெறி யோரும் படிகளி லோர்ந்து * உலகம்
தரிக்கின்ற தாரக னார்தக வால்தரிக் கின்றனமே.

தகவால் தரிக்கின்ற தன்னடி யார்களைத் தன்திறத்தில் *
மிகவா தரஞ்செய்யு மெய்யருள் வித்தகன் மெய்யுரையின் *
அகவா யறிந்தன ராரண நீதி நெறிகுலைதல் *
உகவா ரெனவெங்கள் தேசிக ருண்மை யுரைத்தனரே.

உண்மை யுரைக்கு மறைகளி லோங்கிய வுத்தமனார் *
வண்மை யளப்பரி தாதலின் வந்து கழல்பணிவார் *
தண்மை கிடந்திடத் தாமள வென்ன வியப்பிலதாம் *
உண்மை யுரைத்தன ரோரந் தவிர வுயர்ந்தனரே.

உயர்ந்தநங் காவல னல்லார்க் குரிமை துறந்துயிராய் *
மயர்ந்தமை தீர்ந்து மற்றோர் வழியின்றி யடைக்கலமாய்ப் *
பயந்தவன் நாரணன் பாதங்கள் சேர்ந்த பழவடியார் *
நயந்தகுற் றேவலெல் லாநடு நன்மனு வோதினமே.

ஓது மிரண்டை யிசைந்தரு ளாலுத வுந்திருமால் *
பாதமிரண்டுஞ் சரணெனப் பற்றிநம் பங்கயத்தாள் *
நாதனை நண்ணி நலந்திகழ் காட்டி லடிமையெல்லாம் *
கோதி லுணர்த்தி யுடன்கொள்ளு மாறு குறித்தனமே. 35

குறிப்புடன் மேவுந் தருமங்க ளின்றியக் கோவலனார் *
வெறித்துள வக்கழல் மெய்யர ணென்று விரைந்தடைந்து *
பிறித்த வினைத்திரள் பின்றொட ராவகை யப்பெரியோர் *
மறிப்புடை மன்னருள் வாசகத் தால்மரு ளற்றனமே. 36

மருளற்ற தேசிகர் வானுகப் பாலிந்த வையமெல்லாம் *
இருளற் றிறையவ னிணையடி பூண்டிட வெண்ணுதலால் *
தெருளுற்ற செந்தொழிற் செல்வம் பெருகிச் சிறந்தவர்பால் *
அருளுற்ற சிந்தையி னாலழி யாவிளக் கேற்றினரே. 37

ஏற்றி மனத்தெழில் ஞான விளக்கை யிருளனைத்தும் *
மாற்றி னவர்க்கு * ஒரு கைம்மாறு மாயனுங் காணகில்லான்
போற்றி யுகப்பதும் புந்தியிற் கொள்வதும் பொங்குபுகழ்ச் *
சாற்றி வளர்ப்பதுஞ் சற்றல்ல வோமுன்னம் பெற்றதற்கே. 38

முன்பெற்ற ஞானமு மோகந் துறக்கலு மூன்றுரையில் *
தன்பற்ற தன்மையுந் தாழ்ந்தவர்க் கீயுந் தனித்தகவும் *
மன்பற்றி நின்ற வகைபுரைக் கின்ற மறையவர்பால் *
சின்பற்றி யென்பயன் சீரறி வோர்க்கிவை செப்பினமே. 39

⁂ செப்பச் செவிக்கமு தென்னத் திகழுஞ் செழுங்குணத்துத் *
தப்பற் றவர்க்குத் தாமே யுகந்து தருந்தகவால் *
ஒப்பற்ற நான்மறை யுள்ளக் கருத்தி லுரைத்துரைத்த *
முப்பத் திரண்டிவை முத்தமிழ் சேர்ந்த மொழித்திருவே. 40

எண்சீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்

⁂ புருடன்மணி வரமாகப் பொன்று மூலப்
பிரகிருதி மறுவாக மான்தண்டாகத் *
தெருள்மருள்வாள் மறைவாக வாங்கா ரங்கள்
சார்ங்கஞ்சங் காக மனந் திகிரியாக *
இருடிகங்க ளீரைந்துஞ் சரங்க ளாக
விருபூத மாலைவன மாலை யாகக் *
கருடனுரு வாமறையின் பொருளாங் கண்ணன்
கரிகிரிமே னின்றனைத்துங் காக்கின் றானே. 41

⁂ ஆராத வருளமுதம் பொதிந்த கோயில்
 அம்புயத்தோ னயோத்திமன்னர்க் களித்த கோயில் *
தோலாத தனிவீரன் தொழுத கோயில்
 துணையான வீடணற்குத் துணையாங் கோயில் *
சேராத பயனெல்லாஞ் சேர்க்குங் கோயில்
 செழுமறையின் முதலெழுத்துச் சேர்ந்த கோயில் *
தீராத வினையனைத்துந் தீர்க்குங் கோயில்
 திருவரங்க மெனத்திகழுங் கோயில் தானே. 42

⁂ கண்ணனடி யிணையெமக்குக் காட்டும் வெற்புக்
 கடுவினைய ரிருவினையுங் கடியும் வெற்புத் *
திண்ணமிது வீடென்னத் திகழும் வெற்புத்
 தெளிந்தபெருந் தீர்த்தங்கள் செறிந்த வெற்பு *
புண்ணியத்தின் புகலிதென்னப் புகழும் வெற்புப்
 பொன்னுலகில் போகமெல்லாம் புணர்க்கும் வெற்பு *
விண்ணவரு மண்ணவரும் விரும்பும் வெற்பு
 வேங்கடவெற் பெனவிளங்கும் வேத வெற்பே. 43

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்

⁂ உத்தம வமர்த்தல மமைத்ததொ ரெழிற்றனு வுயர்த்த கணையால் *
அத்திறவரக்கன்முடி பத்துமொருகொத்தென வுதிர்த்ததிறலோன் *
மத்துறு மிகுத்ததயிர் மொய்த்த வெணெய் வைத்ததுணு மத்தனிடமாம் *
அத்திகிரி பத்தர்வினை தொத்தற வறுக்குமணி யத்தி கிரியே. 44

எழுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்

எட்டுமா மூர்த்தி யென்கண்ண னெண்டிக்கு எட்டிறை யெண்பிர கிருதி *
எட்டுமாவரைகளீன்றவெண்குணத்தோன்எட்டெணுமெண்குணமதியோர்க்கு
எட்டுமா மலரெண் சித்தியெண் பத்தி எட்டு யோகாங்க மெண்செல்வம்
எட்டுமா குணமெட் டெட்டெணுங் கலைஎட்டி ரதமேலனவு மெட்டினவே.

எண்சீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்

ஒண்டொடியாள் திருமகளுந் தானு மாகி
 யொருநினைவா லீன்றவுயி ரெல்லா முய்ய *
வண்டுவரை நகர்வாழ வசுதே வர்க்காய்
 மன்னவர்க்குத் தேர்ப்பாக னாகி நின்ற *
தண்டுளவ மலர்மார்பன் தானே சொன்ன
 தனித்தருமந் தானெமக்காய்த் தன்னை யென்றும் *
கண்டுகளித் தடிசூட விலக்காய் நின்ற
 கண்புதையல் விளையாட்டைக் கழிக்கின் றானே. 46

மூண்டாலு மறியதனின் முயல வேண்டா
முன்னமதி லாசைதனை விடுகை திண்மை *
வேண்டாது சரணநெறி வேறோர் கூட்டு
வேண்டிலய னத்திரம்போல் வெள்கி நிற்கும் *
நீண்டாகு நிறைமதியோர் நெறியில் கூடா
நின்றனிமைத் துணையாக வென்றன் பாதம் *
பூண்டாலுன் பிழைகளெல்லாம் பொறுப்பெ னென்ற
புண்ணியனார் புகழனைத்தும் புகழு வோமே. 47

சாதனமு நற்பயனு நானே யாவன்
சாதகனு மென்வசமா யென்னைப் பற்றும் *
சாதனமுஞ் சரணநெறி யன்று மக்குச்
சாதனங்க ளிங்கிலைக்கோ ரிடையி னில்லா *
வேதனைசேர் வேறங்க மிதனில் வேண்டா
வேறெல்லா நிற்குநிலை நானே நிற்பத் *
தூதனுமா நாதனுமா மென்னைப் பற்றிச்
சோகந்தீ ரெனவுரைத்தான் சூழ்கின் றானே. 48

தன்னினைவில் விலக்கின்றித் தன்னை நண்ணார்
நினைவனைத்துந் தான்விளைத்தும் விலக்கு நாதன் *
என்னினைவை யிப்பவத்தி லின்று மாற்றி
யிணையடிக்கீ ழடைக்கலமென் றென்னை வைத்து *
முன்னினைவால் யான்முயன்ற வினையால் வந்த
முனிவயர்ந்து முத்திதர முன்னே தோன்றி *
நன்னினைவா னாமிசையுங் கால மின்றோ
நாளையோ வென்றுநகை செய்கின் றானே. 49

கட்டளைக்கலித்துறை

⁂ பாட்டுக் குரிய பழையவர் மூவரைப் பண்டொருகால் *
மாட்டுக் கருள்தரு மாயன் மலிந்து வருத்துதலால் *
நாட்டுக் கிருள்செக நான்மறை யந்தி நடைவிளங்க *
வீட்டுக் கிடைகழிக் கேவெளி காட்டுமிம் மெய்விளக்கே. 50

ஆசிரியவண்ணவிருத்தம்

⁂ உறுசகட முடையவொரு காலுற் றுணர்ந்தன *
உடன்மருத முடையவொரு போதிற் றவழ்ந்தன *
உறிதடவு மளவிலுர லூடுற்று நின்றன *
உறுநெறியோர் தருமன்விடு தூதுக் குகந்தன *

மறநெறியர் முறியபிரு தானத் துவந்தன *
மலர்மகள்கை வருடமலர் போதிற் சிவந்தன *
மறுபிறவி யறுமுனிவர் மாலுக் கிசைந்தன *
மனுமுறையில் வருவதோர் விமானத் துறைந்தன *
அறமுடைய விசயனமர் தேரில் திகழ்ந்தன *
அடலுரக படமடிய வாடிக் கடிந்தன *
அறுசமய மறிவரிய தானத் தமர்ந்தன *
வணிகுருகை நகர்முனிவர் நாவுக் கமைந்தன *
வெறியுடைய துளவமலர் வீறுக் கணிந்தன *
விழுகரியோர் குமரனென மேவிச் சிறந்தன *
விறலசுரர் படையடைய வீயத் தொடர்ந்தன *
விடலரிய பெரியபெரு மாள்மெய்ப் பதங்களே.

எண்சீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்

மறையுரைக்கும் பொருளெல்லா மெய்யென் றோர்வார்
மன்னியசீர் மதியுடையார் வண்கு ணத்தில் *
குறையுரைக்க நினைவில்லார் குருக்கள் தம்பால்
கோதற்ற மனம்பெற்றார் கொள்வார் நன்மை *
சிறைவளர்க்குஞ் சிலமாந்தர் சங்கே தத்தால்
சிதையாத திண்மதியோர் தெரிந்த தோரார் *
பொறைநிலத்தில் மிகும்புனிதர் காட்டு மெங்கள்
பொன்றாத நன்னெறியில் புகுது வாரே.

கட்டளைக்கலித்துறை

இதுவழி யின்னமு தென்றவ ரின்புலன் வேறிடுவார்
இதுவழி யாமல வென்றறி வாரெங்கள் தேசிகரே *
இதுவழி யெய்துக வென்றுகப் பாலென் பிழைபொறுப்பார்
இதுவழி யாமறை யோரரு ளால்யா மிசைந்தனமே.

⁂ எட்டு மிரண்டு மறியாத வெம்மை யிவையறிவித்து *
எட்டவொண் ணாத விடந்தரு மெங்களம் மாதவனார் *
முட்ட வினைத்திரள் மாள முயன்றிடு மஞ்சலென்றார் *
கட்டெழில் வாசகத் தால்கலங் காநிலை பெற்றனமே.

⁂ வானு ளமர்ந்த வர்க்கும் வருந்த வருநிலைகள் *
தானுள ணுயுகக் குந்தா மிங்கு நமக்குளதே *
கூனுள நெஞ்சுக ளாற்குற்ற மெண்ணி யிகழ்ந்திடினும் *
தேனுள பாத மலர்த்திரு மாலுக்குத் தித்திக்குமே.

⁂ வெள்ளைப் பரிமுகர் தேசிக ராய்விர காலடியோம் *
உள்ளத் தெழுதிய தோலையி லிட்டனம் யாமிதற்கென் *
கொள்ளத் துணியினுங் கோதென் றிகழினுங் கூர்மதியீர் *
எள்ளத் தனையுக வாதிக ழாதென் னெழின்மதியே. 56

அடிவரவு:—பொய்கை, இன்பத்தில், என்னுயிர், ஆரணநூல், நீள வந்து, காளம்வலம், ஆளுமடை, திருவுடன்,—புருடன், ஆராத, கண்ணன், உத்தம, எட்டுமாமூர்த்தி, ஒண்தொடியாள், மூண்டாலும், சாதனமும், தன்னினைவில், பாட்டுக்கு, உறுசகடம், வறை, இதுவழி, எட்டும், வானுள, வெள்ளை. (மூலம்)

மாயாவாத புஜங்க பங்க கருடாயநம:
தேசிகர் திருவடிகளே சரணம்.
ஆக ப்ரபந்தம் 2-க்கு பாசுரம்-95

**அதிகாரசங்க்ரஹம் ஸம்பூர்ணம்.**

---

## மூன்றாவது

# அம்ருதாஸ்வாதிநி

கட்டளைக்கலித்துறை

⁂ மூலங் கிளையென வொன்றிரண் டான மொழியிரண்டும் *
மேலொன் றிலையென நின்றவவ் வித்தகன் தன்னுரையும் *
காலங் கழிவதன் முன்னங் கருத்துறக் கண்டிடவே *
ஞாலம் புகழுநந் தேசிகர் தானம்மை வைத்தனரே. 1

எண்சீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்

காரணமுங் காவலனு மாகி யென்றுங்
கமலையுடன் பிரியாத நாத னான *
நாரணனுக் கடியேனு னடிமை பூண்ட
நல்லடியார்க் கல்லான்மற் றொருவர்க் கல்லேன் *
ஆரணங்கள் கொண்டகமும் புறமுங் கண்டால்
அறிவாகி யறிவதுமா யநுநான் கன்றிச் *
சீரணிந்த சுடர்போலத் திகழ்ந்து நின்றேன்
சிலைவிசயன் தேரனையச் சிறுவே தத்தே. 2

கட்டளைக்கலித்துறை

யானென தென்பதொன் றில்லையென் செய்வ தவனையல்லால் *
ஆன தறிந்திடுந் தன்னடி யார்க்கென்னை யாட்படுத்தத் *
தானென்னை நல்கி நடத்துகின் றான்தன் னருள்வழியே *
நானுன்னை வீடுசெய் வேனென்று நந்திரு நாரணனே. 3

யாதா மிவையனைத் தும்படைத் தேந்து மிறைவனுமாய் *
கோதாங் குணங்க ளுடன்குறு காத குணத்தனுமாய் *
மாதா பிதாவென மன்னுற வாய்க்கதி யென்ன நின்றான் *
போதார் திருவுடன் பொன்னருள் பூத்தநம் புண்ணியனே.

எண்சீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்

இருவிலங்கு கழித்திடரா முடலந் தன்னில்
இலங்குநடு நாடியினு லெம்மை வாங்கி *
ஒருவிலங்கு நெறியில்லா வழியால் மன்னு
முயர்வானி லேற்றியுயிர் நிலையுந் தந்து *
பெருவிலங்கா மருள்தன்னால் தன்னடிக் கீழ்ப்
பிரியாத வகைபூணப் பிணைத்துத் * தன்னார்
உருவிலங்கு மிசைவிக்கு மும்பர் போகம்
உகந்துதருந் திருமாலை யுகந்தோ நாமே.

உறவையிசைந் திறையில்லா வொருவர்க் கென்று
மொண்சுடரா யோரெழுத்தி லோங்கி நின்றோம் *
துறவறமுந் தூய்மதியுந் துயரந் தீர்ப்புந்
துய்யவர்கட் கானமையு மிரண்டி லுற்றோம் *
அறமுயலு மனைத்துறவா யனைத்து மேந்தும்
அம்புயத்தாள் கணவனைநா மணுகப் பெற்றோம் *
பிறவியறுத் தடிசூடி யடிமை யெல்லாம்
பிரியாத வமரருடன் பெற்றோ நாமே.

கருமமென ஞானமென வதனாற் கண்ட
வுயிர்கவருங் காதலெனக் கானி லோங்கும் *
அருமறையால் தருநிலையி லிங்கா னெல்லாம்
அடியேனை யலையாத வண்ண மெண்ணித் *
தரும முடை யாருரைக்க யானறிந்து
தனக்கென்னு வடிமைக்காம் வாழ்ச்சி வேண்டித் *
திருமகளோ டொருகாலும் பிரியா நாதன்
திண்கழலே சேதுவெனச் சேர்கின் றேனே.

வினைவிடுத்து வியன்குணத்தா லெம்மை யாக்கி
வெருவுரைகேட் டவைகேட்க விளம்பி னானும் *
தனையனைத்து மடைந்திடத்தா னடைந்து நின்ற
தன்திருமா துடனிறையுந் தனியா நாதன் *

நினைவழிக்கும் வினைவழிக்கு விலக்காய் நிற்கும்
நிகரில்லா நெடுங்குணங்கள் நிலைபெறத் * தன்
கனைகழற்கி ழடைக்கலமாக் காட்சி தந்து
காரணனுந் தன்காவல் கவர்கின் றானே. 8

⁂ என்னதுயான் செய்கின்றே னென்னா தார்க்கு
இன்னடிமை தந்தளிப்பா னிமையோர் வாழும் *
பொன்னுலகில் திருவுடனே யமர்ந்த நாதன்
புனலாரும் பொழிலரங்கந் திகழ மன்னித் *
தன்னகல மகலாத தகவா லோங்கும்
தகவுடனே தன்கருமந் தானே யெண்ணி *
என்னைநய வடைக்கலங்கொண் டஞ்சல் தந்தென்
அழலாற நிழலார வழிக்கின் றானே. 9

ஒண்டொடியாள் திருமகளுந் தானு மாகி
யொருநினைவா யீன்றவுயி ரெல்லா முய்ய *
வண்டுவரை நகர்வாழ வசுதே வர்க்காய்
மன்னவர்க்குத் தேர்ப்பாக னாகி நின்ற *
தண்டுளவ மலர்மார்பன் தானே சொன்ன
தனித்தருமந் தானெமக்காய்த் தன்னை யென்றும் *
கண்டுகளித் தடிசூட விலக்காய் நின்றக்
கண்புதையல் விளையாட்டைக் கழிக்கின் றானே. 10

கட்டளைக் கலித்துறை

துய்ய மனத்தர் துறையணு காத துணையிலியென் *
ஐய மறுத்துன தாணை கடத்த லகற்றினை * நீ
கையமர் சக்கரக் காவல்நீ காக்குந் திருவருளால் *
வைய மளந்த வடிக்கீழ் அடைக்கலம் வைத்தருளே. 11

எண்சீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்

அறியாத விடைச்சியரு மறியும் வண்ணம்
அம்புயத்தா ளுடனந்நா ளவ தரித்த *
குறையாது மில்லாத கோவிந் தாநின்
குரைகழற்கி ழடைக்கலமாங் குறிப்பு தந்தாய் *
வெறியாரு மலர்மகளும் நீயும் விண்ணில்
விண்ணவர்க ளடிசூட விருக்கு மேன்மை *
குறையாத வினையகற்றி யடிமை கொள்ளக்
குறுகவொரு நன்னாள்நீ குறித்தி டாயே. 12

தத்துவமுஞ் சாதனமும் பயனுங் காட்டுந்
தாரமுத லிருநான்குந் தன் கருத்தால் *
முத்திவழி நாமுயலும் வகையே காண
முகுந்தனிசைந் தருள்செய்த வைந்தா லேந்தும் *
பத்திதனில் படிவில்லார் பரஞ் சுமத்தப்
பார்த்தன்தேர் முன்னேதான் தாழ நின்ற
உத்தமனுர் * உத்தமநல் லுரைநா லெட்டும்
உணர்ந்தவர்தா முகந்தெம்மை யுணர்வித் தாரே. 13

கட்டளைக் கலித்துறை

பரக்கும் புகழ்வரும் பைம்பொருள் வாய்த்திடும் பத்தர்களாய் *
இரக்கின் றவர்க்கிவை யீந்தா லறமுள தென்றியம்பார் *
கரக்குங் கருத்துடைத் தேசிகர் கன்றென நம்மை யெண்ணிச் *
சுரக்குஞ் சுரபிகள் போற்சொரி கின்றனர் சொல்லமுதே. 14

சோகந் தவிர்க்குஞ் சுருதிப் பொருளொன்று சொல்லுகின்றேன் *
நாகந் தனக்கு மிராக்கதர்க் குந்நமக் குஞ்சரணும் *
ஆகண் டலன்மக னுகிய வாவலிப் பேரியதோர் *
காகம் பிழைத்திடக் கண்ணழி வேசெய்த காகுத்தனே. 15

எண்சீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்

ஒருக்காலே சரணுக வடைகின் றூர்க்கும்
உனக்கடிமை யாகின்றே னென்கின் றூர்க்கும் *
அருக்காதே யனைவர்க்கு மனைவ ராலும்
அஞ்சேலென் றருள்கொடுப்ப னிதுதா னேதும் *
இருக்காலு மெழில்முனிவர் நினைவி னுலும்
இவையறிவார் செயலுடனென் னிசைவி னுலும் *
நெருக்காத நீள்விரத மெனக்கொன் றென்னு
நெறியுரைத்தார் நிலையுணர்ந்து நிலைபெற் ரேமே. 16

கட்டளைக் கலித்துறை

பொன்னை யிகழ்ந்து விருகங்கள் புல்லிய புல்லுகந்தால் *
மன்ன ரெடுப்பதப் பொன்னல தேமன் னுலகனைத்தும் *
தன்னை யடைந்திடத் தானருள் செய்யுந் தனிச்சிலையோன் *
பொன்னடி நாமடைந் தோம்புற மாறென்கொல் செய்திடினே. 17

வேதத் திரளில் விதியுணர்ந் தோர்கள் விரித்துரைத்த *
காதற் கதியையு ஞானத் தையுங்கரு மங்களையும் *

சாதிக்க வல்ல சரணு கதிதனி னின்றநிலை *
ஓதத் தொடங்கு மெழுத்தின் திறத்தி னுணர்மின்களே. 18

எண்சீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்

மூவுலகுந் தன்பிழையைத் தானே சாற்ற
முனிவர்களுந் தேவர்களு முனிந்த வந்நாள் *
தாவரிதா யெங்கும்போய்த் தளர்ந்து வீழ்ந்த
தனிக்காகந் தானிரந்த வுயிர் வழங்கிக் *
காவலினி யெமக்கெங்குங் கடனென் றெண்ணிக்
காணநிலை யிலச்சினையன் றிட்ட வள்ளல் *
ஏவல்பய னிரக்கமிதுக் காறென் றோதும்
எழிலுடையா ரிணையடிக்கீ ழிருப்போ நாமே. 19

கட்டளைக் கலித்துறை

திருத்தம் பெரியவர் சேருந் துறையில் செறிவிலர்க்கு *
வருத்தங் கழிந்த வழியரு ளென்றநம் மண்மகளார் *
கருத்தொன்ற வாதி வராக முரைத்த கதியறிவார் *
பொருத்தந் தெளிந்துரைக் கப்போய் யிலாமதி பெற்றனமே. 20

எண்சீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்

இடம்பெற்று ரெல்லாமென் னுடலாய் நிற்க
விடர்பிறப்பொன் றிவையில்லா வென்னை யன்பால் *
அடம்பற்று மவனென்று நினைந்தான் யாவன்
அவனுவி சரியும்போ தறிவு மாறி *
உடம்பிற்று னுபலம்போல் கிடக்க நானே
யுய்யும்வகை நினைந்துயர்ந்த கதியா லென்றன் *
இடம்பெற்றென் னுடல்வாழ வெடுப்ப னென்ற
வெம்பெருமா னருள்பெற்று மருள்செற் றோமே. 21

கட்டளைக் கலித்துறை

இரண்டுரை யாதநம் மேன முரைத்த வுரையிரண்டின்
திரண்ட பொருள்க டெளிந்தடி சூடினந் திண்ணிருளால்
சுருண்டநஞ் ஞானச் சுடரொளி சுற்றும் பரப்பதன்முன்
புரண்டது நம்வினை போமிடம் பார்த்தினிப் போமளவே. 22

மலையுங் குலையுமென் றெண்ணியும் வன்பெரும் புண்டிரங்கித் *
தலையும் வெளுத்தபின் றானே யழிய விசைகின்றிலீர் *
அலையுங் கடல்கொண்ட வைய மளித்தவன் மெய்யருளே *
நிலையென்று நாடி நிலைநின்ற பொய்ம்மதி நீக்குமினே. 23

கண்ணன் கழல்தொழக் கூப்பிய கையின் பெருமைதன்னை *
எண்ணங் கடக்க யமுனைத் துறைவர் இயம்புதலால் *
திண்ண மிதுவென்று தேறித் தெளிந்தபின் சின்மதியோர் *
பண்ணும் பணிதிகள் பாற்றிப் பழந்தொழில் பற்றினமே. 24

எண்சீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்

பொங்குபுன லாறுகளிற் புவன மெல்லாம்
பொன்கழலா லளந்தவன்தன் தாளால் வந்த *
கங்கையெனு நதிபோலக் கடல்க ளேழில்
கமலைபிறந் தவனுகந்த கடலே போலச் *
சங்குகளி லவனேந்துஞ் சங்கே போலத்
தாரிலவன் தண்டுளவத் தாரே போல *
எங்கள்குல பதிகளிவை மேலா மென்றே
யெண்ணியநல் வார்த்தைகள்நா மிசைகின் றோமே. 25

சீர்க்கடலின் திரையென்னத் தகவால் மிக்க
தேசிகராய்த் திணியிருளாங் கடலை நீக்கிப் *
பாற்கடலோன் திருவணையாய் நின்று பாரங்
காணாத பவக்கடலைக் கடத்து கின்றான் *
நீர்க்குமரக் கலமென்ன விரைவ ரின்ப
மெழுந்தழியுங் குமிழியென விகந்தொ ழிந்தோம் *
ஆர்க்கினிநா மென்கடவோ நமக்கு மாரென்
கடவாரென் றடைந்தவர்கட் கறிவித் தோமே. 26

⁂ காசினியில் வரையனைத்துங் காயா வண்ணன்
கடைந்தெடுத்த கௌத்துவத்தின் சீர்மைக் கொவ்வா *
காசிமுத லாகியநன் னகரி யெல்லாங்
கார்மேனி யருளாளர் கச்சிக் கொவ்வா *
மாசின்மனந் தெளிமுனிவர் வகுத்த தெல்லாம்
மாலுகந்த வாசிரியர் வார்த்தைக் கொவ்வா *
வாசியறிந் திவையுரைத்தோம் வையத் துள்ளீர்
வைப்பாக விவைகொண்டு மகிழ்மி னீரே. 27

⁂ அந்தமிலாப் பேரின்ப மறிந்த பேர்க்கு
அடியோமை யறிவுடனே யென்றுங் காத்து *
முந்தைவினை நிரைவழியி லொழுகா தெம்மை
முன்னிலையாந் தேசிகர்தம் முன்னே சேர்த்து *

மந்திரமு மந்திரத்தின் வழியுங் காட்டி
வழிப்படுத்தி வானேற்றி யடிமை கொள்ளத் *
தந்தையென நின்றதனித் திருமால் தாளில்
தலைவைத்தோம் சடகோப னருளி னாலே. 28

தான்றனக்குத் தன்னாலே தோன்றித் தன்னோ
டொளியணைக்குங் குணத்தாலுந் தன்னைக் கண்டு *
தான்றனக்கென் றறியாத தன்கு ணத்தைத்
தன்குணத்தால் தானிறையிற் றானே கூட்டி *
ஊன்மருத்துப் புலன்மனமா நாங்கா ரங்கள்
ஒருமூலப் பிரகிருதி யன்றி நின்ற *
நான்றனக்குத் தான்றனக்கென் றிசைவு தந்த
நாரணனை நான்மறையால் நான்கண் டேனே. 29

கழியாத கருவினையிற் படிந்த நம்மைக்
காலமிது வென்றொருகால் காவல் செய்து *
பழியாத நல்வினையிற் படிந்தார் தாளிற்
பணிவித்துப் பாசங்க ளடைய நீக்கிச் *
சுழியாத செவ்வழியிற் றுணைவ ரோடே
தொலையாத பேரின்பந் தரமே லேற்றி *
அழியாத வருளாழிப் பெருமான் செய்யும்
அந்தமிலா வுதவியெல்லா மளப்பா ராரே. 30

⁂ நின்னருளாங் கதியன்றி மற்றொன் றில்லேன்
நெடுங்காலம் பிழைசெய்த நிலை கழிந்தேன் *
உன்னருளுக் கினிதான நிலை யுகந்தேன்
உன்சரணே சரணென்னுந் துணிவு பூண்டேன் *
மன்னிருளாய் நின்றநிலை யெமக்குத் தீர்த்து
வானவர்தம் வாழ்ச்சிதர வரித்தே னுன்னை *
இன்னருளா லினியெமக்கோர் பரமேற் றாமல்
என்திருமா லடைக்கலங்கொ ளென்னை நீயே. 31

கட்டளைக் கலித்துறை

பரவும் மறைகளெல் லாம்பதஞ் சேர்ந்தொன்ற நின்றபிரான் *
இரவன் றிரவியின் காலத் தழைத்த வெழிற்படையோன் *
அரவுங் கருடனு மன்புட னேந்து மடியிரண்டும் *
தரவெந் தமக்கரு ளால்தள ராமனந் தந்தனனே. 32

பதினான்குசீர்க்கழி நெடிலாசிரியச் சந்தவிருத்தம்

⁂ அலர்ந்தவம்புயத்திருந்து தேனருந்தியின்னக
லல்குலாரசைந்தடைந்த நடைகொளாததனமெனோ *
நலந்தவிர்ந்ததாலதென்கொ னுவின்வீறிழந்ததால்
நாவணங்குநாதர்தந்த நாவின்வீறிழந்ததென் *
சலந்தவிர்ந்துவாதுசெய்து சாடிமூண்டமுண்டரைச்
சருவிலாரெனக்கனைத் துரைத்தவெதிராசர்தம் *
வலந்தருங்கைநாயனார் வளைக்கிசைந்தகீர்த்தியால்
வாரிவாலதாமதென்று மாசில்வாழிவாழியே.

கட்டளைக் கலித்துறை

சடையன் திறலவர் கள்பெரு ஞானக் கடலதனை *
இடையமி ழாது கடக்கினு மீதள வென்றறியார் *
விடையுட னேழன் றடர்த்தவன் மெய்யருள் பெற்றநல்லோர்
அடைய வறிந்துரைக் கவ்வடி யோமு மறிந்தனமே.

எண்சீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்

பாவளருந் தமிழ்மறையின் பயனே கொண்ட
பாண்பெருமாள் பாடியதோர் பாடல் பத்தில் *
காவலனுங் கணவனுமாய்க் கலந்து நின்ற
காரணனைக் கருத்துறநான் கண்ட பின்பு *
கோவலனுங் கோமானு மான வந்நாள்
குரவைபுணர் கோவியர்தங் குறிப்பே கொண்டு *
சேவலுடன் பிரியாத பெடைபோல் சேர்ந்து
தீவினையோர் தனிமையெல்லாந் தீர்ந்தோ நாமே.

ஆதிமறை யெனவோங்கு மரங்கத் துள்ளே
அருளாருங் கடலைக்கண் டவனென் பாணன் *
ஓதியதோ ரிருநான்கு மிரண்டு மான
வொருபத்தும் பற்றாக வுணர்ந் துரைத்தோம் *
நீதியறி யாதநிலை யறிவார்க் கெல்லாம்
நிலையிதுவே யென்றுநிலை நாடி நின்றோம் *
வேதியர்தாம் விரித்துரைக்கும் விளைவுக் கெல்லாம்
விதையாகு மிதுவென்று விளம்பி னோமே.

⁂ காண்பனவு முரைப்பனவு மற்றொன் றின்றிக்
கண்ணனையே கண்டுரைத்த கடிய காதல் *

பாண்பெருமா ளருள்செய்த பாடல் பத்தும்
பழமறையின் பொருளென்று பரவு கின்றோம் *
வீண்பெரிய விரிதிரைநீர் வையத் துள்ளே
வேதாந்த வாரியனென் றியம்ப நின்றோம்
நாண்பெரியோ மல்லோநாம் நன்றுந் தீதும்
நமக்குரைப்பா ருளரென்று நாடு வோமே. 37

அடிவரவு:—மூலம், காரணம், யானெனது, யாதாமிவை, இருவிலங்கு, உறவை, கருமம், வினைவிடுத்து, என்னது, ஒண்டொடியாள், துய்யமனத்தர், அறியாத, தத்துவம், பரக்கும், சோகந்தவிர்க்கும், ஒருக்காலே, பொன்னை, வேதத்திரள், மூவுலகும், திருத்தம், இடம்பெற்றார், இரண்டு, மலையும், கண்ணன், பொங்குபுனல், சீர்க்கடல், காசினியில், அந்தமிலா, தான்றனக்கு, கழியாத, நின்னருளாம், பரவும், அலர்ந்த, சடையன், பாவளரும், ஆதிமறை, காண்பனவும். (அடற்புள்)

மாயாவாத புஜங்க பங்க கருடாயநமஃ
தேசிகர் திருவடிகளே சரணம்.
ஆக ப்ரபந்தம் 3-க்கு பாசுரம்-132
**அம்ருதாஸ்வாதிநி ஸம்பூர்ணம்.**

---

## நான்காவது

# பரமபதஸோபாநம்

### தனியன்கள்

வ்யாஜீக்ருத்ய
தஸ்மை நமோ வஸ்து ஹராய வை.

எண்சீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்

தேனேறு தாமரையாள் திருமார் பன்றன்
திண்ணருளால் அவனடியில் விவேகம் பெற்று *
கூனேறு பவக்குழியை வெறுத்த தற்பின்
கூர்விரத்தி யுடன்வினையின் திரளுக் கஞ்சிக் *
கூனேறு பிறையிறையோன் சாபந் தீர்த்தான்
குரைகழலே சரணடைந்து குரம்பை விட்டு *
வானேறும் வழிப்படிக ளடைவே கண்ட
வண்புகழ்தூப் புல்வள்ள லருள்பெற் றோமே.

கட்டளைக்கலித்துறை

✤ அடற்புள் ளரசிலு மந்தணர் மாட்டிலும் * இன்னமுதக்
கடற்பள்ளி தன்னிலுங் காவிரி யுள்ளு முகந்தபிரான் *

இடைப்பிள்ளை யாகி யுரைத்த துரைக்கு மெதிவரானார் *
மடைப்பள்ளி வந்த மணமெங்கள் வார்த்தையுள் மன்னியதே. 1

கள்ள மனத்துடன் கண்டு முயன்ற கடுவினையால் *
நள்ளிரு ளாழியி னற்சுவை யைந்தென நாடியதோர் *
அள்ளலி னாளும் விழுந்தழி யாவகை யாரணநூல் *
வள்ளல் வழங்கிய வான்படி யான வழியிதுவே. 2

எண்சீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்

அருவுருவா னவையனைத்து மறிவா ரேனும்
அருங்கலைகள் கற்றுரைக்க வல்லா ரேனும் *
தருமவழி யழியாமற் காப்பா ரேனுந்
தனிமறையின் தாத்பரியந் தருவா ரேனும் *
இருவினையி னொழுக்கத்தா லேவ லோரா
திங்கோநாஞ் சிறையிருந்த வீனந் தீர்க்கும் *
திருமகளார் பிரியாத தேவன் திண்ணந்
தேறாதார் திண்படியி லேறா தாரே. 3

கட்டளைக் கலித்துறை

மறுத்தார் திருவுடன் மார்பில் தரித்தவன் வாசகத்தை *
மறுத்தார் மயக்கமு மற்றத னால்வந்த மாநரகும் *
நிறுத்தார் பவத்தி னெடுநா ளுழன்றமை கண்டதனால் *
வெறுத்தா ரணநெறி யேவெள்கி யோட விரைவர்களே. 4

எண்சீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்

வான்பட்ட மன்னிருளில் மயங்கு மாறும்
மறித்தொருகா லெலையூழி சென்றா லன்றோர் *
ஊண்பட்ட வுடலாழி வினையொ ழிக்கில்
ஒருகரையுங் காணாதே யொழுகு மாறும் *
தேன்பட்ட விடம்போலத் தித்திக் கின்ற
சிறுபயனே யுறுபயனென் றழுந்து மாறும் *
தான்பட்ட படியிங்ஙோர் தானே கண்டு
தளர்ந்திடுமேல் வளர்ந்திடுமேல் தக்க வாறே. 5

கட்டளைக் கலித்துறை

உலகத் துயர்ந்தவ ரொன்றும் பயனி லுறுந்துயரும் *
அலகிற் படாதவப் போகங் கவர்ந்தெழு மம்புயத்தோன் *
கலகத் தொழில்மது கைடப ரால்படுங் கட்டமெண்ணில் *
பலகற்ற மெய்யடி யார்படி யாரிக் கடும்பவத்தே. 6

எண்சீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்

தந்திரங்க ளளவிலராய்த் தனத்தால் மிக்க
தார்வேந்தர் தொழுவைய மாண்டார் மாண்டார் *
சந்திரனுஞ் சூரியனும் வீயுங் காலந்
தாரகையின் வடமற்றுத் தனிவா னாகும் *
இந்திரனு மேறுயர்த்த வீசன் றானும்
ஈரிரண்டு முகத்தானு மில்லா வந்நாள் *
நந்திருமால் நிலைகண்டார் நாக மெல்லாம்
நரகென்று நற்பதமே நாடு வாரே. 7

கட்டளைக் கலித்துறை

துறவற மேதுணி வார்துணுக் கற்ற விளந்துணிவோர் *
உரவில ராதலி னுமுயர்ந் தாருட னொன்றிநின்றோம் *
மறவழி மாற்றியெம் மையலைத் தீர்ந்தவர் மன்னருளால் *
கறவை யுகந்த பிரான்கழல் சூடுங் கருத்தினமே. 8

எண்சீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்

வந்தனபோல் வருவனவு மநந்த மாகி
மாளாத துயர்தருவல் வினைநெ ருப்புக்
கிந்தனமா யெண்ணிறந்த கால மெல்லாம்
இன்னமுமிப் பவக்குழிக்கே யிழியா வண்ணம் *
வெந்ததொரு குழவியைநற் குமர னாக்கும்
வெறித்துளப வித்தகனார் விதியே கொண்டார் *
பந்தனமா மவையனைத்தும் பாறு கைக்குப்
பழமறையின் பதமொன்றே பயிலு வாரே. 9

கட்டளைக் கலித்துறை

கருமாலை யில்வருங் கட்டங் கழிக்குங் கருத்துடையார் *
ஒருமால்பெருகிய யோகின் முயன்றும தன்றியுநம் *
திருமா லடியிணைத் திண்சர ணாகு மெனவரித்தும் *
தருமா லினியவை தானே யெனத்தக வெண்ணுவரே. 10

எண்சீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்

முன்செய்த வினைத்திரளின் முளைத்த தன்றி
மற்றுள்ள முதலறிந்து முளைத்த கூற்றில் *
தன்செய்ய திருவருளா லிசைவு பார்த்துத்
தழல்சேர்ந்த தூலமெனத் தானே தீர்த்துப் *

பின்செய்த வினையில்நினை வொன்று தொன்றும்
பிழைபொறுத்து வேறுளது விரகால் மாற்றும் *
என்செய்ய தாமரைக்கட் பெருமா னெண்ண
மெண்ணாதா ரெட்டிரண்டு மெண்ணா தாரே. 11

கட்டளைக் கலித்துறை

உறையிட்ட வாளென வூனுள் ளுறைகின்ற யோகிகளை *
நறுமட் டெழிலுற்ற நற்றுள வேந்திய நாயகனார் *
நிறைமட் டிலாத நெடும்பயன் காட்ட நினைத்து * உடலச்
சிறைவெட்டி விட்டு வழிப்படுத் தும்வகை செப்புவமே. 12

எண்சீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்

முன்கருவி யீரைந்தும் மனத்திற் கூட்டி
முக்கியமா மருத்திலவை சேர்த்த தெல்லாம் *
நன்குணரு முயிரிற்சேர்த் தைம்பூ தத்தை
நண்ணுவித்துத் தான்தன்பால் வைக்கு நாதன் *
ஒன்பதுடன் வாசலிரண் டுடைத்தா யுள்ளே
யொருகோடி துயர்விளைக்கு முடம்பா யொன்றும் *
வன்சிறையின் தலைவாசல் திறந்து நம்மை
வானேற வழிப்படுத்த மனமுற் றானே. 13

கட்டளைக் கலித்துறை

தெருளார் பிரம புரத்திறை சேர்ந்திடர் தீர்ந்தவர் தாம் *
இருளார் பிரம புரச்சிறை தீர்ந்தபின் வந்தெதிர்கொண்டு *
அருளா லமரர் நடந்தவிம் மாயை கடந்ததன்பின் *
சுருளார் பவனர கச்சுழ லாற்றின்தன் சூழ்ச்சியிலே. 14

எண்சீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்

விழியல்லால் வேலில்லை விண்ணின் மாதர்
மேனியல்லால் வில்லில்லை மீன வர்க்கு *
மொழியல்லா லமுதில்லை யென்று முன்னாள்
முத்திவழி முனிந்தடைந்த மோகந் தீர்ந்தோம் *
கழியல்லாற் கடலில்லை யென்பார் போலக்
காரியமே காரணமென் றுரைப்பார் காட்டும் *
வழியல்லா வழியெல்லாங் கடந்தோ மற்று
வானேறும் வழிகண்டோ மகிழ்ந்திட் டோமே. 15

கட்டளைக் கலித்துறை

வன்பற் றுடன்மயல் பூண்டுமற் றோர்கதி யாலினநாள் *
என்பெற் றதுபெறுந் தானமு மெத்தனை போதுளதாம் *
துன்பற் றதந்துணி வாற்றுயர் தீர்க்குந் துழாய்முடியான் *
இன்புற்ற நல்வழி யாலேற்று நற்பத மெண்ணுவமே. 16

எண்சீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்

பண்டையிரு வினையாற்றிற் படிந்து பாரங்
காணுதே யொழுகியநாம் பாக்கி யத்தால் *
வண்டமரு மலர்மாதர் மின்னாய் மன்ன
வைசந்தி மணிவில்லாய் விளங்க வான்சேர் *
கொண்டலருள் மழைபொழிய வந்த தொப்பாங்
குளிர்ந்துதெளிந் தமுதாய விரசை யாற்றைக்
கண்டணுகிக் * கருத்தாலே கடந்து மீளாக்
கரைகண்டோர் கதியெல்லாங் கதித்திட் டோமே. 17

கட்டளைக் கலித்துறை

பூவள ருந்திரு மாது புணர்ந்தநம் புண்ணியனூர் *
தாவள மான தனித்திவஞ் சேர்ந்து தமருடனே *
நாவள ரும்பெரு நான்மறை யோதிய கீதமெல்லாம் *
பாவள ருந்தமிழ்ப் பல்லாண் டிசையுடன் பாடுவமே. 18

எண்சீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்

அடலுரக முண்டுமிழ்ந்த வருக்கன் போல
வழுக்கடைந்து கழுவியநற் றரளம் போலக் *
கடலொழுகிக் கரைசேர்ந்த கலமே போலக்
காட்டுத்தீ கலந்தொழிந்த களிறே போல *
மடல்கவரும் மயல்கழிந்த மாதர் போல
வன்சிறைபோய் மன்னர்பதம் பெற்றார் போல *
உடன்முதலா வுயிர்மறைக்கு மாயை நீங்கி
யுயர்ந்தபத மேறியுணர்ந் தொன்றி னேமே. 19

மண்ணுலகில் மயல்தீர்ந்து மனந் தளும்பி
மன்னாத பயனிகந்து மாலே யன்றிக் *
கண்ணிலதென் றஞ்சியவன் கழலே பூண்டு
கடுஞ்சிறைபோய்க் கரையேறுங் கதியே சென்று *
விண்ணுலகில் வியப்பெல்லாம் விளங்கக் கண்டு
விண்ணவர்தங் குழாங்களுடன் வேதம் பாடிப்

பண்ணுலகிற் படியாத விசையாற் பாடும்
பல்லாண்டே பல்லாண்டும் பாடு வோமே. 20

⁂ மாளாத வினையனைத்து மாள நாம்போய்
வானேறி மலர்மகளா ரன்பு பூணும் *
தோளாத மாமணிக்குத் தொண்டு பூண்டுத்
தொழுதுகந்து தோத்திரங்கள் பாடி யாடி *
கேளாத பழமறையின் கீதங் கேட்டுக்
கிடையாத பேரின்பம் பெருக நாளும் *
மீளாத பேரடிமைக் கன்பு பெற்றோம்
மேதினியி லிருக்கின்றோம் விதியி னாலே. 21

அடிவரவு:—அடற்புள், கள்ள, அருவரு, மறுத்தார், வான்பட்ட, உலகத்து, தந்திரங்கள், துறவறமே, வந்தன, கருமாலை, முன்செய்த, உறையிட்ட, முன்கருவி, தெருளார், விழி, வன்பற்றுடன், பண்டை, பூவளரும், அடலுரகம், மண்ணுலகில் மாளாத. (எண்டள)

மாயாவாத புஜங்க பங்க கருடாயநம:

தேசிகர் திருவடிகளே சரணம்.

ஆக ப்ரபந்தம் 4-க்கு பாசுரம்-153

பரமபதஸோபாநம் ஸம்பூர்ணம்.

---

## ஐந்தாவது

# பரமதபங்கம்

கட்டளைக் கலித்துறை

⁂ எண்டள வம்புயத் துள்ளிலங் கும்மறு கோணமிசை *
வண்பணி லந்திகி ரிவளை வில்வளை வாய்முசலம் *
திண்கை யிலங்குசஞ் சீர்திக ழுங்கதை செங்கமலம் *
எண்படை யேந்திநின் றுனெழி லாழி யிறையவனே. 1

பதினறுசீர்க்கழிநெடிலாசிரியவண்ணவிருத்தம்

விடுநெறியஞ்சிவிடத்தொடக்கியவிதியரடைந்துதொழத்தழைத்தெழு *
விழியருள்தந்துவிலக்கடிக்களைவிரகிலியம்பிவிலக்கிவைத்தனர் *
கொடுவினையென்பதனைத்தினைத்தனைகொணர்தலிகழ்ந்தகுணத்தனத்தினர் *
குருகையில்வந்துகொழுப்படக்கியகுலபதிதந்தகுறிப்பில்வைத்தனர் *
கடுசா கன்புக ழுற்றி மற்றொரு கதிபெறு மன்பி லெமைப் பொருத்தினர் *
கமலையுகந்தகடற்கிடைக்கடல்கருணையுயர்ந்ததிடர்க்கொருக்கினர் *
படுமுத லன்றிவ ளர்த்த பற்கலை பலபல வொன்றவெ மக்கு ரைத்தனர் *
பழமறை யந்திந டைக்கி டைச்சுவர் பரமத மென்றறி டித்த பத்தரே. 2

கட்டளைக் கலித்துறை

போமுரைக் கும்பொருள் யாமறி யோம்பொரு ளார்மறையில் *
தாமுரைக் கின்றன தாமே யறியுந் தரமுடையார் *
ஆமுரைக் கென்றிவை யாய்ந்தெடுத் தாரண நூல்வழியே *
நாமுரைக் கும்வகை நல்லரு ளேந்தி நவின்றனரே. 3

சித்து மசித்து மிறையு மெனத்தெளி வுற்றுநின்ற *
தத்துவ மூன்றுந் தனித்தனி காட்டுந் தனிமறையால் *
முத்தி வழிக்கிது மூல மெனத்துணி வார்களையும் *
கத்தி மயக்குங் கதகரை நாங்கடி கின்றனமே. 4

முத்தின் வடங்க ளெனமுகுந் தன்பூண்ட மூவகையாம் *
சித்தி லருஞ்சுரு திச்செவ்வை மாறிய சிந்தைகளால் *
பத்தி லிரண்டுமெய்க் கப்பகட் டும்பர வாதியர்தம் *
கத்தில் விழுந்தடைந் தவ்வழுக் கின்று கழற்றினமே. 5

நாக்கிய லும்வகை நம்மை யளித்தவர் நல்லருளால் *
பாக்கிய மேந்திப் பரனடி யார்திறம் பார்த்ததற்பின் *
தாக்கியர் தங்கள் தலைமிசைத் தாக்கித் தனிமறைதான் *
போக்கிய மென்றத னிற்பொய்ம் மதங்களைப் போக்குவமே. 6

தீவகை மாற்றியன் றேர்தேரி லாரணம் பாடியநம் *
தேவகி சீர்மக னூர்திறம் பாவருள் சூடியநாம் *
மூவகை யாமறி யாத்தத் துவத்தின் முகமறிவார் *
நாவகை யேநடத் துந்நடை பார்த்து நடந்தனமே. 7

வேலைப் புறமகங் காண்பது போல்வேத நன்னெறிசேர் *
நூலைப் புறமகங் காண்டலி னுண்ணறி வின்றிநின்றீர் *
மாலைப் பெறவழி காட்டிய தேசிகர் வாசகமே *
ஓலைப் புறத்தி லெழுதுகின் றேமுள்ளே எழுதுமினே. 8

சிறைநிலை யாம்பவத் திற்சிறு தேனின்ப முண்டுழல்வார் *
மறைநிலை கண்டறி யாமயல் மாற்றிய மன்னருளே *
துறைநிலை பார மெனத்துளங் காவமு தக்கடலாம் *
இறைநிலை யாமுரைத் தோமெங் குருக்க ளியம்பினவே. 9

வெறியார் துளவுடை வித்தகன் தன்மையின் மெய்யறிவார் *
குறியார் நெடியவ ரென்றொரு குற்றம் பிறர்க்குரையார் *
அறியார் திறத்தி லருள்புரிந் தாரண நன்னெறியால் *
சிறியார் வழிக ளழிப்பதுந் தீங்கு கழிப்பதற்கே. 10

எண்சீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்

மீண்டுரைக்க விரகுதரும் தருக்கங் கொண்டே
வேண்டுங்கால் வேண்டுவதே விளம்பு கின்றார் *
கண்டதற்கு விபரீதங் கத்து கின்றார்
காணாத குறைமறையிற் காட்ட நிற்பார் *
பண்டொருத்தன் கண்டுரைத்தே னானே யென்னப்
பலவகையா லுபாதிகளாற் படிந்து வீழ்வார் *
கொண்டலொக்கும் திருமேனி மாயக் கூத்தன்
குரைகழல்சேர் விதிவகையிற் கூடா தாரே. 11

கட்டளைக் கலித்துறை

கண்டது மெய்யெனிற் காணு மறையி லறிவுகண்டோம் *
கண்டத லாத திலஃதெனிற் கண்டிலங் குற்றமிதில் *
கண்டது போல்மறை காட்டுவ துங்கண்ட தொத்ததனால் *
உண்டது கேட்கு முலோகா யதரின்று மீறுவதே. 12

எண்சீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்

கண்டதனாற் காணாத தனுமிக் கின்றார்
கண்டொருத்த னுரைத்ததனைக் கவரு கின்றார் *
உண்டுபசி கெடுமென்றே யுணர்ந்துண் கின்றார்
ஒன்றாலே யொன்றைத்தாஞ் சாதிக் கின்றார் *
பண்டுமுலை யுண்டதனால் முலையுண் கின்றார்
பார்க்கின்றார் பலரல்லாத் தம்மை மற்றும் *
கண்டுமதி கெட்டநிலை காண கில்லார்
காணாத திலதென்று கலங்கு வாரே. 13

கட்டளைக் கலித்துறை

காணா திலதெனுங் கல்வியி னரைக் கடிந்ததற்பின் *
கோணார் குதர்க்கங்கள் கொண்டே குழப்பும் பவுத்தர்களில் *
நாணா தனைத்து மிலதென்று நால்வகை யிதன்றென்றும் *
வாணா ளறுக்கின்ற மத்திமத் தான்வழி மாற்றுவமே. 14

எண்சீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்

மானமிலை மேயமிலை யென்று மற்றோர்
வாதநெறி யிலையென்னும் வாது பூண்ட *
தானுமிலை தன்னுரையும் பொருளு மில்லை
தத்துவத்தி னுணர்த்திசய மில்லை யென்றும் *

வானவரு மானவரு மனமும் வெள்க
 வளம்பேசு மதிகேடன் மத்தி மத்தான் *
தேனநெறி கொண்டனைத்துந் திருடா வண்ணஞ்
 செழுமதிபோ லெழுமதியால் சேமித் தோமே. 15

கட்டளைக் கலித்துறை

முற்றுஞ் சகத்தில தென்றே பகட்டிய முட்டரைநாம் *
சுற்றுந் துறந்து துறையில்நின் றேதுக ளாக்கியபின் *
மற்றொன் றிலது மதிபல வுண்டென்று வஞ்சனையால் *
சற்றுந் துறந்தயோ காசார னைச்சதிக் கின்றனமே. 16

எண்சீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்

உளக்கதியை நாமுள்ளி யுள்ளந் தேறி
 யுலகத்தா ருகந்திசைய வுலகுண் டென்றோம் *
இளக்கவரி தாகியநற் றருக்கஞ் சேர்ந்த
 வெழின்மறையி லீசனுட னெம்மைக் கண்டோம் *
விளக்குநிரை போல்மதிகள் வேறாய் வேறொன்
 றறியாதே விளங்குமென விளம்பு கின்ற *
களக்கருத்தன் கண்ணிரண்டு மழித்தோ நாணுக்
 காகம்போற் றிரிந்தவனென் கதறு மாறே. 17

கட்டளைக் கலித்துறை

பொருளொன் றிலதென்ற போதமொன் றங்கொண்ட பொய்யரைநாம் *
தெருள்கொண்டு தீர்த்தபின் காணவொண் ணுப்பொரு டேடுகின்ற *
மருள்கொண்ட சூதரைக் குஞ்சௌத் திராந்திகன் வண்ணிக்கைநாம் *
இருள்கொண்ட பாழுங் கிணறென் றிகழ்ந்தோட வியம்புவமே. 18

எண்சீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்

நிலையில்லாப் பொருள்மதியை விளைத்துத் தான்சேர்
 நிறங்கொடுத்துத் தானழியுந் தன்னால் வந்த *
நிலையில்லா மதிதன்னில் நிறத்தைக் காணும்
 இதுகாணும் பொருள்காண்கை யென்ற நீசன் *
முலையில்லாத் தாய்கொடுத்த முலைப்பா லுண்ணு
 முகமில்லா மொழியெனவே மொழிந்த வார்த்தை *
தலையில்லாத் தாளுருங் கணக்காய் நின்ற
 கட்டளைநாங் கண்டின்று காட்டி னோமே. 19

கட்டளைக் கலித்துறை

காண்கின் றவனில்லை காட்சியுங் கண்டது முண்டவைதான் *
ஏண்கொண் டனவன் றிவற்றிற் குணமு நிலையுமில்லை *
சேண்கொண்ட சந்ததி யாற்சேர்ந்து மொன்றென நிற்குமென்ற *
கோண்கொண்ட கோளுரை வைபாடி கன்குறை கூறுவமே. 20

எண்சீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்

கும்பிடுவா ராரென்று தேடு கின்றார்
குணங்களையுந் தங்களுக்குக் கூறு கின்றார் *
தம்படியைத் தமர்க்குரைத்துப் படிவிக் கின்றார்
தமக்கினிமேல் வீடென்று சாதிக் கின்றார் *
தம்புடவை யுடல்குறித்து நெடிதெண் கின்றார்
சந்ததிக்குத் தவம்பலிக்கத் தாம்போ கின்றார் *
செம்படவர் செய்கின்ற சிற்றி னிப்பைச்
சேவகப்பத் துடனேநாஞ் சிதைத்திட் டோமே. 21

கட்டளைக் கலித்துறை

வேதங்கள் மௌவி விளங்க வியாசன் விரித்தநன்னூல் *
பாதங்க ளான பதினாறி லீசன் படிமறைத்துப் *
பேதங்க ளில்லையென் றோர்பிர மப்பிச் சியம்புகின்ற *
போதங் கழிந்தவ னைப்புத்தர் மாட்டுடன் பூட்டுவமே. 22

எண்சீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்

பிறிவில்லா விருளொன்று பிணக்கொன் றில்லாப்
பெருவெயிலை மறைத்துலகங் காட்டு மென்ன *
அறிவில்லா வறிவொன்றை யவித்தை மூடி
யகம்புறமென் றிவையனைத்து மமைக்கு மென்பார் *
செறிவில்லாப் புத்தருடன் சேர்ந்து கெட்டார்
சீவனையு மீசனையுஞ் சிதைக்கப் பார்த்தார் *
நெறியில்லா நேர்வழியுந் தானே யானு
நெடுமாலை நாமடைந்து நிலைபெற் றோமே. 23

கட்டளைக் கலித்துறை

சோதனை விட்டொருத் தன்சொல்ல மெய்யெனச் சோகதரைச் *
சேதனை யற்றவ ரென்று சிதைத்தபின் சீவர்கட்கோர் *
வேதனை செய்கை வேறுமற மென்று விளம்பிவைத்தே *
மாதவ மென்று மயிர்பறிப் பார்மயல் மாற்றுவமே. 24

எண்சீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்

சொன்னார்தாஞ் சொன்னதெல்லாந் துறவோ மென்றும்
சொன்னதுவே சொன்னதல தாகு மென்றும் *
தின்னாதுந் தின்னுமது மேக மென்றுஞ்
சிறியனுமாம் பெரியனுமாஞ் சீவ னென்றும் *
மன்னாது மன்னுமது மொன்றே யென்றும்
வையமெல்லாம் விழுகின்ற தென்று மென்றும் *
தென்னாடும் வடநாடுஞ் சிரிக்கப் பேசுஞ்
சினநெறியார் சினமெல்லாஞ் சிதைக்கின் றோமே. 25

கட்டளைக் கலித்துறை

ஐகாந் திகமொன்று மில்லையென் றுசையைத் தாமுடிப்பார் *
சோகாந்த மாகத் துறப்புண்ட பின்றொழில் வைதிகமென்று *
ஏகாந்தி கள்சொன்ன வீசன் படியில் விகற்பமெண்ணும் *
லோகாந்த வீணர்தம் வேதாந்த வார்த்தை விலக்குவமே. 26

எண்சீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்

ஒன்றெனவும் பலவெனவுந் தோற்று கின்ற
வுலகெல்லா மொருபிரமந் தானே யாக்கி *
நன்றெனவுந் தீதெனவும் பிரிந்த தெல்லா
நன்றன்று தீதன்றே யென நவின்றார் *
கன்றுமலர் பசுவுமல ராகி நின்றே
கன்றாகிப் பசுவாகி நின்ற வண்ணம் *
இன்றுமறை மாட்டுக்கோ ரிடைய னான
வேகாந்தி யறிந்திடா மியம்பி னோமே. 27

கட்டளைக் கலித்துறை

சாயா மறைகளிற் சத்தந் தெளிந்திடச் சாற்றுதலால் *
தூயா ரிவரென்று தோன்றநின் றேபல சூதுகளால் *
மாயா மதமு மறுசின வாதும் பவுத்தமுஞ்சேர் *
வையா கரணர்சொல் லும்மறு மாற்றங்கள் மாற்றுவமே. 28

எண்சீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்

கலகத்திற் கலங்கிவருங் காணிக் கெல்லாங்
கண்ணாறு சதிரவழி கட்டு வார்போல் *
உலகத்தில் மறைசேர்ந்த வுரைகள் தன்னால்
ஒருபிழையுஞ் சேராம லுபக ரித்தார் *

பலகத்தும் பவுத்தர்முத லான பண்டைப்
பகற்கள்ளர் பகடழிக்கப் பரவும் பொய்யாம் *
சிலகத்துச் சித்தாந்த மறிய கில்லாச்
சிறுவரினி மயங்காமற் சேமித் தோமே. 29

கட்டளைக் கலித்துறை

கண்டத லாதன கட்டுத லாற்கண்டு விட்டதனால் *
பண்டுள தான மறைக்குப் பழமையை மாற்றுதலால் *
கொண்டது மீசனைக் கொள்ளா வகையென்று கூறுதலால் *
கண்டக ராய்நின்ற காணுதர் வாதங் கழற்றுவமே. 30

எண்சீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்

ஆகமத்தை யனுமான மென்கை யாலும்
அழியாத மறையழிக்க நினைத்த லாலும் *
போகமற்ற புலம்போலக் கிடைக்கை தானே
புண்ணியர்க்கு வீடென்று புணர்த்த லாலும் *
மாகமொத்த மணிவண்ணன் படியை மாற்றி
மற்றவனுக் கொருபடியை வகுத்த லாலும் *
காகமொத்த காணுதன் கண்ணை வாங்கிக்
காக்கைக்கா ரென்றலத்தல் காட்டி னோமே. 31

கட்டளைக் கலித்துறை

கோதம நூல்களைக் குற்றமில் லாவகை கூட்டலுமாம் *
கோது கழித்தொரு கூற்றிற் குணங்களைக் கொள்ளவுமாம் *
யாது மிகழ்ந்தொரு நீதியை யாமே வகுக்கவுமாம் *
வேதியர் நன்னய வித்தர மென்பது மெய்யுளதே. 32

எண்சீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்

நான்மறைக்குத் துணையாக நல்லோ ரெண்ணும்
நாலிரண்டி லொன்றான நயநூல் தன்னில் *
கூன்மறைத்தல் கோதுளது கழித்தல் மற்றோர்
கோணுத கோதில்வழி வகுத்த லன்றி *
ஊன்மறைத்த வுயிரொளிபோ லொத்த தொவ்வா
துயரில்லாக் காணுத முரைத்த தெல்லாம் *
வான்மறைக்க மடிக்கோலும் வண்ண மென்றே
மற்றிதற்கார் மறுமாற்றம் பேசு வாரே. 33

கட்டளைக் கலித்துறை

ஈசனு மற்றணங் கும்மில தென்றெழில் நான்மறையில் *
பேசிய நல்வினை யால்பெரும் பாழுக்கு நீரிறைக்கும் *
நீசரை நீதிக ளால்நிக மாந்தத்தி னூல்வழியே *
மாசில் மனங்கொடுத் தும்மறு மாற்றங்கள் மாற்றுவமே. 34

எண்சீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்

கனைகடல்போ லொருநீராஞ் சூத்தி ரத்தைக்
கவந்தனையு மிராகுவையும் போலக் கண்டு *
நினைவுடனே நிலைத்தரும மிகழ்ந்து நிற்கும்
நீசர்நிலை நிலைநாடா வண்ண மெண்ணி *
வினைபரவு சைமினியார் வேத நூலை
வேதாந்த நூலுடனே விரகாற் கோத்த *
முனையுடைய முழுமதிநம் முனிவர் சொன்ன
மொழிவழியே வழியென்று முயன்றிட் டோமே. 35

கட்டளைக் கலித்துறை

முக்குண மாய்நின்ற மூலப் பிரகிரு திக்கழியா *
அக்குண மற்ற வருத்துணை மற்றதற் கீசனில்லை *
இக்கணை னைப்படி யையைந்து மெண்ணில்முன் முத்தியென்றும் *
பக்கண வீணர் பழம்பகட் டைப்பழு தாக்குவமே. 36

எண்சீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்

ஈசனில னென்பதனு லென்றுஞ் சீவர்
எங்குமுள ரிலருணர்வை யென்ற வத்தால் *
பாசமென்னும் பிரகிருதி தன்னு லென்றும்
பலமுமிலை வீடுமிலை யென்னும் பண்பால் *
காசினிநீர் முதலான காரி யங்கள்
கச்சபத்தின் கால்கைபோ லென்னுங் கத்தால் *
நாசமில நிலைகாணு ஞாலத் துள்ளீர்
நாமிசையாச் சாங்கியத்தை நாடு வார்க்கே. 37

கட்டளைக் கலித்துறை

தாவிப் புவனங்கள் தாளிணை சூட்டிய தந்தையுந்திப் *
பூவிற் பிறக்கினும் பூதங்க ளெல்லாம் புணர்த்திடினும் *
நாவிற் பிரிவின்றி நாமங்கை வாழினும் நான்மறையில் *
பாவித்த தன்றி யுரைப்பது பாறும் பதர்த்திரளே. 38

எண்சீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்

காரணனு புலகளிக்குங் கண்ணன் தேசைக்
கண்ணடி நிழல்போலக் காண்கை யாலும் *
தாரணையில் முடிவான சமாதி தன்னைத்
தனக்கேற்றும் விளக்கென்று தனிக்கை யாலும் *
காரணயா மதுதனக்குப் பயனுஞ் சீவன்
கைவல்ய நிலையென்று கணிக்கை யாலும் *
கோரணியின் கோலமெனக் குறிக்க லாகுங்
கோகனதத் தயன்கூறுஞ் சமயக் கூறே.

கட்டளைக் கலித்துறை

சாது சனங்களெல் லாஞ்சச்சை யென்னுஞ்சலம் புணர்த்தார் *
கோதம சாபமொன் றால்கொடுங் கோலங்கள் கொண்டுலகில் *
பூத பதிக்கடி யாரென நின்றவன் பொய்புரையால் *
வேத மகற்றிநிற் பார்விகற் பங்கள் விலக்குவமே.

எண்சீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்

மாதவனே பரனென்று வையங் காண
மழுவேந்தி மயல்தீர்க்க வல்ல தேவன் *
கைதவமொன் றுகந்தவரைக் கடிய சாபங்
கதுவியது யதின்பலத்தைக் கருதிப் பண்டை *
வேதநெறி யணுகாத விலங்கு தாவி
வேறாக விரித்துரைத்த விகற்ப மெல்லாம் *
ஓதுவது சூத்திரத்துக் கென்று ரைத்தான் *
ஓதாதே யோதுவிக்கு மொருவன் றானே.

கந்தமலர் மகள்மின்னுங் காரார் மேனிக்
கருணைமுகில் கண்டகண்கள் மயிலா யாலும் *
அந்தமில்பே ரின்பத்தி லடிய ரோடே
யடிமையென்னும் போகமுத மருந்தி வாழத் *
தந்தமதி யிழந்தாறர் சமயம் புக்குத்
தழல்வழிபோய்த் தடுமாறித் தளர்ந்து வீழ்ந்தீர் *
சந்தநெறி நேரறிவார் சரணஞ் சேர்ந்து
சங்கேதத் தவமுநீர் தவிர்மி னீரே.

கட்டளைக் கலித்துறை

யாதுமி லாதவன் றும்மெவர்க் குந்நன்றி யெண்ணியநம் *
மாதவ னார்வத னத்தமு துண்ணும் வலம்புரிபோல் *

வாதுக ளாலழி யாமறை மௌலியின் வான்பொருளே *
ஓதிய பஞ்சராத் திரமுக வாரை யொழுக்குவமே. 43

எண்சீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்

⁂ பூவலருந் திருவுந்திப் புனிதன் வையம்
பொன்னடியா ளளந்திருவர் போற்ற நின்ற *
நாவலரு மகலகளெல்லாந் தன்னை நாட
நாடாத நன்னிதியர் நணுகு நாதன் *
கோவலனாய் நிரையளித்த நிரைபோல் வேதங்
கோவாகக் கோமானு யதன்பால் சேர்த்துக் *
காவலிது நல்லுயிருக் கென்று காட்டுங்
கார்த்தயுகக் கதிகண்டோங் கரைகண் டோமே. 44

கட்டளைக் கலித்துறை

நமக்கார் துணையென நானென் றருள்தரு நாரணனார் *
உமக்கா றிவையென் றடியிணை காட்ட வுணர்ந்தடையும் *
எமக்கோர் பரமினி யில்லா திருவினை மாற்றுதலில் *
தமக்கே பரமென்று தாமுய ருந்தாஞ் சாற்றுவமே. 45

எண்சீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்

பலத்திலொரு துவக்கற்ற பதவி காட்டிப்
பல்லுயிருந் தடுமாறப் பண்ணு கின்ற *
கலித்திரளின் கடுங்கழுதைக் கத்து மாற்றிக்
கண்ணுடையார் கண்டுரைத்த கதியைச் சொன்னோம் *
வலத்திலகு மறுவொன்றால் மறுவொன் றில்லா
மாமணியாய் மலர்மாத ரொளியா மங்கல் *
நலத்திலொரு நிகரில்லா நாதன் பாதம்
நல்வழியா மல்வழக்கார் நடத்து வாரே. 46

எல்லார்க்கு மெளிதான வேற்றத் தாலும்
இனியுரைக்கை மிகையான விரக்கத் தாலும் *
சொல்லார்க்கு மளவாலு மமைத லாலுந்
துணிவரிதாய்த் துணைதுறக்குஞ் சுகரத் தாலும் *
கல்லார்க்குங் கற்றார்சொற் கவர்த லாலுங்
கண்ணனுரை முடிசூடி முடித்த லாலும் *
நல்லார்க்குந் தீயார்க்கு மிதுவே நன்றாம்
நாரணர்க்கே யடைக்கலமாய் நல்கு வீரே. 47

கட்டளைக் கலித்துறை

பண்டை மறைக்குப் பகையென நின்ற பரமதங்கள் *
கொண்டவர் கொள்ளும் பயனென் றிலதெனுங் கூர்மதியால் *
வண்டுவ ரைக்கர சானநம் மாயனை வானுலகில் *
கண்டு களிப்ப தெனுங்காத லொன்றைக் கருதுவமே. 48

எண்சீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்

கலந்திகழும் போகங்கள் கண்டு வெள்கிக்
காரியமுங் காரணமுங் கடந்து நாம்போய்க் *
குலந்திகழுங் குருக்களடி சூடி மன்னுங்
குற்றேவ லடியவர்தங் குழாங்கள் கூடி *
வலந்திகழுந் திருமகளு மற்றி டத்தே
மன்னியமண் மகளாரு நீளை யாரும் *
நலந்திகழ வீற்றிருந்த நாதன் பாத
நமக்கிதுவே முடியென்ன நண்ணி னோமே. 49

கட்டளைக் கலித்துறை

மானங்க ளின்றி வருத்துரைக் கின்ற மதங்களெல்லாம் *
தானங்க ளன்று தரும நெறிக்கென்று சாற்றியபின் *
வானங் கவர்ந்து மறைமுடி சூடிய மாதவத்தோர் *
ஞானங்க ளொன்ற நடக்கின்ற நல்வழி நாடுவமே. 50

தன்னடிக் கீழுல கேழையும் வைத்த தனித்திருமால் *
பொன்னடிக் கேற்கின்ற புண்ணியர் கேண்மின் புகலறிவார் *
முன்னடி பார்த்து முயலுத லாலவர் சாயையெனப் *
பின்னடி பார்த்து நடந்து பெரும்பத மேறுவமே. 51

எண்சீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்

வையமெல்லா மிருள்நீக்கும் மணிவி ளக்காய்
மன்னியநான் மறைமௌலி மதியே கொண்டு *
மெய்யலது விளம்பாத வியாசன் காட்டும்
விலக்கில்லா நல்வழியே விரைந்து செல்வீர் *
ஐயமற வறுசமயக் குறும்ப றுத்தோம்
அணியரங்க ரடியவர்க்கே யடிமை செய்தோம் *
மையகடல் வட்டத்துள் மற்றுந் தோற்றும்
வாதியர்தம் வாய்ப்பகட்டை மாற்றி னோமே. 52

கோதவமொன் றில்லாத தகவே கொண்ட
கொண்டலென வந்துலகி லவர்க் கன்றோர் *
தூதுவனு யொருகோடி மறைக ளெல்லாந்
தொடர்ந்தோடத் தனியோடித் துயரந் தீர்த்த *

மாதவனூர் வடகொங்கில் வானி யாற்றின்
வண்ணிகைநன் னடங்கண்டு மகிழ்ந்து வாழும் *
போதிவைநாம் பொன்னயிந்தை நகரின் முன்னாள்
புணராத பரமதப்போர் பூரித் தோமே. 53

பதினாறுசீர்க்கழிநெடிலாசிரியச்சந்தவிருத்தம்

** திகிரிமழு வுயர்குந்தந் தண்டஙகு சம் * பொறி
சிதறுசத முசுவங்கி வாள்வே லமர்ந்ததும் *
தெளிபணில சிலைகண்ணி சீரங்க செவ்விடிச் *
செழியகதை முசலந்திரி சூலந் திகழ்ந்ததும் *
அகிலவுல குகள்கண்டை யாயோ ரலங்கலி
லடைய * வடை விலிலங்க வாசின்றி நின்றதும் *
அணியுமரு கணையுமல வாமென்ற நின்றடி
யடையுமடி யரையன்பி னலஞ்ச லென்பதும் *
மகிழுமம ரர்கணங் கள்வானங் கவர்ந்திட *
மலியுமசு ரர்கொணர்ந்த மாயந் துறந்ததும் *
வளரணிம ணிகள்மின்ன வானந்தி கொண்டிட *
மறைமுறை முறைவணங்க மாறின்றி வென்றதும் *
சிகியிரவி மதியுமிழு தேசுந்த வெண்டிசைத் *
திணிமருள்செ கவுகந்து சேமங்கள் செய்ததும் *
திகழர வணையரங்கர் தேசென்ன மன்னிய *
திரிசுதரி சனர்செய்ய வீரெண் புயங்களே. 54

அடிவரவு:—எண்டளவம், விடுநெறி, போமுறை, சித்தும், முத்தின், நாக்கியனும், தீவகை, வேலைப்புறம், சிறைநிலை, வெறியார், மிண்டுரைக்க, கண்டது, கண்டதனால், காணுதில, மானமிலை, முற்றும், உளக்கதியை, பொருள், நிலையில்லா, காண்கின்றவன், கும்பிடுவார், வேதங்கள், பிறி வில்லா, சோதனை, சொன்னார், ஐகாந்தி, ஒன்றெனவும், சாயாமறை, கல கத்தில், கண்டதலாதன, ஆகமத்தை, கோதமநூல், நான்மறை, ஈசனும், கனைகடல், முக்குணமாய், ஈசனிலன், தாவிப்புவனங்கள், காரணனாய், சாதுஜனங்கள், மாதவனே, கந்தமலர், யாதுமிலாத, பூவலரும், நமக்கார், பலத்திலொரு, எல்லார்க்கும், பண்டைமறை, கலந்திகழும், மானங்கள், தன்னடிக்கீழ், வையமெல்லாம், கோதவம், திகிரி (வாழி)

மாயாவாத புஜங்க பங்க கருடாய நமஃ

தேசிகர் திருவடிகளே சரணம்.

ஆக ப்ரபந்தம் 5-க்கு பாசுரம்-207

ப்ரமதபங்கம் ஸம்பூர்ணம்.

ஆ ரு வ து

# அத்திகிரிமஹாத்மியம்

## தனியன்கள்

### நேரிசைவெண்பா

வாழி யருளாளர் வாழியணி யத்திகிரி *
வாழி யெதிராசன் வாசகத்தோர் *-வாழி
சரண கதியென்னுஞ் சார்வுடன் மற்றொன்றை *
அரணாகக் கொள்ளாதா ரன்பு. 1

### எண்சீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்

எண்டிசையுங் கடலேழு மலைக ளேழும்
ஈரேழு வையகமும் படைத்தி லங்கும் *
புண்டரிகத் தயன்புணர்த்த பெரிய வேள்விப்
புனிதநறும் போக்கியத்தை யுகந்து வந்து *
தொண்டையெனு மண்டலத்தி னடுவிற் பாரில்
தூநிலமெய் விரதத்திற் றோன்றி நின்ற *
கொண்டலருட் குணமேநாங் கூறு கின்றோங்
கூர்மதியீர் குறிப்பாகக் கொண்மி னீரே. 2

### செந்தொடையாய்வந்த ஒருசார் வேற்றொலி வெண்டுறை

வம்மின்புலவீரருளாளப் பெருமாளென்றுமருளாழி
அம்மானென்றுந் * திருமகளைப் பெற்றுமெனெஞ்சங் கோயில்கொண்ட *
பேரருளாளரென்றும் * வியப்பா விருதூதும்படிகரைபுரண்ட
கருணைக்கடலையெவ்வண்ணம் பேசுவீரீதென்னபாங்கே. 3

### கட்டளைக் கலித்துறை

ஒன்றே புகலென் றுணர்ந்தவர் காட்டத் திருவருளால் *
அன்றே யடைக்கலங் கொண்டநம் மத்தி கிரித்திருமால் *
இன்றே யிசையி னிணையடி சேர்ப்ப ரினிப்பிறவோம் *
நன்றே வருவதெல் லாநமக் குப்பர மொன்றிலதே. 4

வம்பவிழ் போதமர் மாத ருகந்தவம் மாநிதியைத் *
தன்பல மேகொண்டு காணக் கருதிய தாமரையோன் *
முன்பல குற்றத்து வல்வினை மொய்க்க முகிழ்மதியாய் *
அம்புலி வேண்டிய பாலனைப் போல வழுதனனே. 5

அடங்காக் கரணங்க ளைந்துட னாறு மடக்கிமுன்னம் *
நெடுங்கால மிந்நில மேநிலை யாய்ப்பூண்டு நீடுறைவான் *
சடங்காற் பெரிய தவங்கள்செய் தேனென்ன தன்மையிதென் *
றிடங்காத் திருந்த திசைமுகன் றன்னை யிகழ்ந்தனனே. 6

எண்சீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்

விண்ணுலகில் வீற்றிருந்த மேன்மை யாலும்
வேதங்க ளீரிரண்டும் விரித்த லாலும் *
கண்ணனைநான் கருத்துறவே காண்பெ னென்னக்
காணமல் விலக்கியதன் வினையைக் காண *
எண்ணியநற் புவனங்க ளேழு மாறும்
இருமூன்று தீவமுமெட் டிடமும் விட்டுப் *
பண்ணியநல் விரதமெல்லாம் பலிக்கு மென்று
பாரதத்தைப் பங்கயத்தோன் படிந்திட் டானே. 7

அறுசீர்க்கழிநெடிலாசிரியச்சந்தவிருத்தம்

எத்திசை நிலனு மெய்தி யருந்தவஞ் செய்த வந்நாள் *
சத்திய விரதஞ் செல்வா யென்றதோ ருரையின் சார்வால் *
அத்திசை சென்ற ழைத்தங் கமரில் லெடுப்பான் றன்னை *
உத்தர வேதி செய்யென் றுரையணங் கிறையு ரைத்தான். 8

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்

உத்தம வமர்த்தல மமைத்ததொ ரெழில்தனு வுயர்த்த கணையால் *
அத்திற வரக்கன்முடி பத்துமொரு கொத்தென வுதிர்த்த திறலோன் *
மத்துற மிகுத்ததயிர் மொய்த்த வெணெய் வைத்தனு மத்தனிடமாம் *
அத்திகிரி பத்தர்வினை தொத்தற வறுக்குமணி யத்தி கிரியே. 9

எண்சீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்

திண்மணிகள் பொன்னுடனே சேர்த லாலுஞ்
சிதையாத நூல்வழியிற் சேர்த்தி யாலும் *
வண்மையெழு மீரிரண்டு வண்ணத் தாலும்
வானவர்க்கும் வியப்பான வகுப்பி னாலும் *
உண்மையுடை வாசியொளி யோசை யாலு
மொருகாலு மழியாத வழகி னாலும் *
மண்மகளார்க் கலங்கார மென்ன மன்னு
மதிட்கச்சி நகர்கண்டு மகிழ்ந்திட் டானே. 10

காமங்கள் பலகொண்ட வேதங் கொண்டு
கைதவமே செய்வார்க்குக் காணகில்லாப் *
பூமங்கை கேள்வனைநாங் கண்டு போற்றப்
புண்ணியத்தி னிகரில்லா விரதம் பூண்டேன் *
சாமங்கள் கழிவதன்முன் சடக்கெனப்போய்த்
தன்னூற்றிற் றனியிருந்து தவஞ்செய் கின்ற *
நாமங்கை வந்திடநீ யழைப்பா யென்று
நன்மகனை நான்முகன்று னவின்றிட் டானே. 11

பன்னிருசீர்க்கழிநெடிலாசிரியச்சந்தவிருத்தம்

அன்னவடி வாளசையு மன்னகடை யாளுயரு மன்னவர சேறிவருவா *
ளத்தனய னத்தனய னுத்திதனை யத்திதென வுத்தி புரியாள் *
நன்னடைவி டாநடமி தென்னநட வாநடுவுள் மண்ணுகுட கேறியிழிவாள் *
நற்பதிக ளற்பதிகள் கற்புரள வற்புதம ருக்கதியி னல் *
கன்னடைவி டாவிடமி லுன்னதிசி ருவிகட மன்னுகிரி கூடமிடியக் *
கட்டவிடை யிற்றுவிழ முற்றும்விழி யுற்றடைய விட்ட ருகுற *
அன்னநய சீரயனி தென்னென விழாவமரர் மன்னுமதி யேறிமகிழ *
வச்சுத னணைத்தனுவி லத்திசை வரத்தகைய வற்றனுகி னள். 12

நேரிசைவெண்பா

அன்று நயந்த வயமேத மாவேள்வி *
பொன்ற வுரையணங்கு பூம்புனலாய்க் *-கன்றிவர
ஆதி யயனுக் கருள்செய் தணையானான் *
தாதை யரவணையான் தான். 13

கட்டளைக் கலித்துறை

தரணியில் மன்னி யயனூர் தனித்தவங் காத்தபிரான் *
கருணை யெனுங்கட லாடித் திருவணை கண்டதற்பின் *
திரணா கெண்ணிய சித்திர குத்தன் தெரிந்துவைத்த *
கருணையி லேறிய சூழ்வினை முற்றுந் துறந்தனமே. 14

சுகலேச மெண்ணிய சூழ்வினை தீர்க்கத் துணிந்தயனூர் *
அகலாத வன்புடன் கொண்ட வயமேத வேதியின்மேல் *
புகலோங்கு பொன்மலை யென்றதோர் புண்ணிய கோடியுடன் *
பகலோன் பகல்விளக் காகப் பரஞ்சுடர் தோன்றியதே. 15

எண்சீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்

பெருமையுடை யத்திகிரிப் பெருமாள் வந்தார்
பேராத வருள்பொழியும் பெருமாள் வந்தார் *

அருமறையி னுச்சிதனில் நின்றார் வந்தார்
அங்கமுட னவையாகு மரியோர் வந்தார் *
திருவுரையாய்த் தாம்பொருளாய் நிற்பார் வந்தார்
திருவருளாற் செழுங்கலைகள் தந்தார் வந்தார் *
மருவிலர்க்கு மயக்குரைக்கு மாயோர் வந்தார்
வானேற வழிதந்தார் வந்தார் தாமே. 16

அத்திகிரி யருளாளப் பெருமாள் வந்தார்
ஆனைபரி தேரின்மே லழகர் வந்தார் *
கச்சிதனில் கண்கொடுக்கும் பெருமாள் வந்தார்
கருதவரந் தருந்தெய்வப் பெருமாள் வந்தார் *
முத்திமழை பொழியுமுகில் வண்ணர் வந்தார்
மூலமென வோலமிட வல்லார் வந்தார் *
உத்தரவே திக்குள்ளே யுதித்தார் வந்தார்
உம்பர்தொழுங் கழலுடையார் வந்தார் தாமே. 17

பன்னிருசீர்க்கழிநெடிலாசிரியச்சந்தவிருத்தம்

⁂ திருபரி திசைந்த மகுடமு மெழில்மதி திகழ்ந்த வதனமும் *
இருவகை யிலங்கு குழல்களி லெதிர்பொர வுகந்த மகரமும் *
ஒருதக வுயர்ந்த திருமக ளொளிமறுவில் மன்னு மகலமும் *
உருவரு வமிழ்ந்த வுதரமு முலகடைய நின்ற கழல்களும் *
மருவினிடை யோங்கு புனலென மலைகுனிய நின்ற மலையென *
மருளற விளங்கு மொளியென மலரய னுகந்த பயனென *
அருவினுறை கின்ற வுயிரென வடியவ ருகந்த வமுதென *
அருமறைக ளொன்றி யடிதொழ வருள்வரதர் நின்றபெருமையே.

இருபத்தெண்சீர்க்கழிநெடிலாசிரியவண்ணவிருத்தம்

சித்த சித்தென விரித்து ரைத்தன வனைத்த மைத்துறையு மிறைவனார் *
சிறிய பெரியவுரு வடைய வுடலமென நடல மிலதிலகு நிலையினார் *
சித்திரத் தொழிலையொத்த பத்தரொடுமுத்தர் பித்தியெனுமுணர்வினார் *
சிதைவின்மறைநெறியிலெறியவுருமுறைகள்முறியசிறையரியநிறைவினார்
கத்துவிக் கவல கத்து வித்தைவழி கற்றவர்க் கசைவில் மாயனார் *
கபிலர் கணசரணர் சுகதர் சமணரரர் வழிக ளழியுமருள் மொழியினார் *
கத்தி லக்கிலு மருக்கு லத்திலு மசித்தி லொக்குமொரு முதல்வனார் *
காண மிடுகடிய பதினொ ரிருடிகமு மடைய முடியுமடி யிருடியார் *
ஒத்த னைத்துலகு மொற்றி யொற்றிவரு மிப்பவத் திசையு மசைவினார் *
உருவ மருவமெனு முலகில் முடகிலென லுவமை யிலதிலகு தலைவனார் *

உத்த மப்படி வகுத்த வித்தைகளி லுத்தரிக் கவுணர் குணவனார் *
உரிய கிரிசைகளி லரிய தொருவிரகு தெரிய விரையுமவர் பரிவினார் *
சத்தசத்தெனும னைத்த னைத்தவினை தொத்த றுக்கவல துணிவினார் *
சரியு மளவிலுரி யவரை யறிவரிய தமனி நெறிசொருகு விரகினார் *
தத்து வத்திர ளுதைத் துதைத்தடைவு தத்து விக்குமவர் தலைவனார் *
தருக வுணருமவர் சரண மணுகவிட லரிய வருள்வரத ரடியமே. 19

எண்சீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்

திருமகள்மண் மகணீளை முதலா வெல்லாத்
தேவியருந் தன்னுடனே திகழ்ந்து நிற்கத் *
தருமமிரு மூன்றுமுத லனைத்துந் தோன்றத்
தன்னனைய சூரிகள்தன் னடிக்கீழ் வாழ *
அருமறைசே ரளவில்லா லவனி யின்கண்
அரவணைமேல் வீற்றிருப்பா லனைத்துங் காக்கும் *
கருமணியைக் கரிகிரிமேல் கண்டே னென்றன்
கடுவினைக ளனைத்துநான் கண்டி லேனே. 20

பதினான்குசீர்க்கழிநெடிலாசிரியச்சந்தவிருத்தம்

பெடையி ரண்டையொ ரனம டைந்துபி ரிந்திடா வகை பேசலாம் *
பெருகு மருவிக ளருகு மருவிய பெரிய மணிவரை பயிலலாம் *
பிடியி ரண்டொடு களப மொன்றுபி ணைந்த பேரழ கோதலாம் *
பிரிவி லொளியொடு நிழலு மருகுறு மிரவி யிலகுதல் பரவலாம் *
கொடியி ரண்டொடு விடவி யொன்றுகு ளிர்ந்த வாறுகு லாவலாம் *
குறைவில் சுருதியு நினைவு மிலகிய தரும வருநிலை யென்னலாம் *
அடியி ரண்டையு மடையு மன்பர றிந்த பேரரு ளாளனார் *
அணுகு மலர்மக ளவனி மகளொடு கரடி கிரிநிலை கவர்தலே. 21

எண்சீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்

வேரொப்பார் விண்முதலாங் காவுக் கெல்லாம்
விழியொப்பார் வேதமெனுங் கண்ட னக்குக் *
காரொப்பார் கருணைமழை பொழிந்தி டுங்காற்
கடலொப்பார் கண்டிடினுங் காணாக் கூத்தால் *
நீரொப்பார் நிலமளிக்குந் தன்மை தன்னால்
நிலமொப்பார் நெடும்பிழைகள் பொறுக்கு நேரால் *
ஆரொப்பா ரிவர்குணங்க ளனைத்துங் கண்டால்
அருளாளர் தாமெனினுந் தமக்கொவ் வாரே. 22

கட்டளைக் கலித்துறை

எந்நில முங்குரத் தாற்குறி செய்த வெழிற்பரிகொண்டு *
அன்ன முயர்த்தசெய் யோனன்று வேள்விசெய் வேதியின்மேல் *
முன்னிலை யாகிய மூர்த்தியுட னான்முக மற்றுமுனக்கு *
என்ன வரந்தரு வோமென்று நாத னியம்பினனே. 23

† சென்று மலர்பறித் தெந்நாதன் சேவடிப் போதுகந்து *
நன்றென நீர்சுடர் நன்முக வாச விலைகொடுத்துக் *
கன்ன விலட்டுவத் தோடன்னஞ் சீடைக் கறிபடைத்துப் *
பின்னுஞ் செவித் ‡ தவர் பாதம் பணிமின்க ளென்றனனே. 24

கொச்சகக்கலிப்பா

ஆழிநிலை வினைகடிவா னயமேத முடிந்ததற்பின் *
வேழமலை நாயகனார் விடைகொடுக்க விண்ணேறி *
நாழிகையில் வானவரை மாற்றியிடு நான்முகன்றான் *
ஊழியெலா மழியாத யோகமடைந் திருந்தானே. 25

கட்டளைக் கலித்துறை

ஆதி யுகத்தயன் கண்டிட நின்ற வருள்வரதர் *
காத லுயர்த்த களிற்றைத் திரேதையில் காத்தளித்து *
வாதுயர் தேவ குருவுக் கிரங்கித் துவாபரத்தில் *
சோதிய நந்தன் கலியிற் றொழுதெழ நின்றனரே. 26

கட்டளைக் கலிப்பா

புண்டரீக முயர்த்த புராணனார் பொய்யில் மாமகவுத் தரவேதியில் *
கொண்டலாரருள் மாரிபொழிந்திடக் கொண்டதோருயர் கூர்மதியன்பினால் *
பண்டைநான்மறை மௌலிபடிந்தநான் பாரில்மெய்விரதக்கவி பாடினேன் *
தொண்டைமண்டல வேதியர்வாழவே தூயதென்மறை வல்லவர்வாழவே. 27

எண்சீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்

‡‡ உய்விரத மொன்றின்றி யடைந்தா ருய்ய
வொருவிரதந் தான்கொண்ட வுயர்ந்த மாலை *
செய்விரத மொன்றானுந் தெளிய கில்லாச்
சிந்தையினால் திசைபடைத்த திசைமு கன்றான் *
பொய்விரத நிலமெல்லாம் போயே மீண்டு
புகலிதுவே புண்ணியத்துக் கென்று சேர்ந்த *
மெய்விரத நன்னிலத்து மேன்மை யேத்தி
வேதாந்த வாசிரியன் விளங்கி னானே. 28

---

† இப்பாசுரம் தேசிகர் செய்ததன்றென்றும் முன்னோர்களாலே சேர்க்கப்பட்டதென்றும் வியாக்கியாதா அருளிச்செய்கிறார்.

‡ ‘தெம்பெருமான்பதம்’ என்று வேறுபாடமுமுண்டு.

நேரிசைவெண்பா

⁂ சீராருந் தூப்புல் திருவேங் கடமுடையான் *
தாரா ரருளாளர் தாள்நயந்து *—சீராக
மெய்விரத நன்னிலத்து மேன்மை யிதுமொழிந்தான் *
கையிற்கனி போலக் கண்டு. 29

அடிவரவு:—வாழி, எண்டிசையும், வம்மின், ஒன்றேபுகல், வம்பவிழ், அடங்கா, விண்ணுலகில், எத்திசை, உத்தம, திண்மணி, காமங்கள், அன்னவடிவாள், அன்று, தரணியில், சுகலேசம், பெருமை, அத்திகிரி, திருபரிதி, சித்தசித்தென, திருமகள், பெடையிரண்டு, வேறொப்பார், எந்நிலமும், சென்று, ஆழி, ஆதியுகம், புண்டரீகம், உய்விரதம், சீராரும், (பத்தி)

மாயாவாத புஜங்க பங்க கருடாயநம:

தேசிகர் திருவடிகளே சரணம்

ஆக ப்ரபந்தம் 6-க்கு பாசுரம்-239.

அத்திகிரிமஹாத்மியம் ஸம்பூர்ணம்.

---

ஏழாவது

# அடைக்கலப்பத்து

கொச்சகக்கலிப்பா

⁂ பத்திமுத லாமவற்றிற் பதியெனக்குக் கூடாமல் *
எத்திசையு முழன்றோடி யிளைத்துவிழுங் காகம்போல் *
முத்திதரு நகரேழில் முக்கியமாங் கச்சிதனில் *
அத்திகிரி யருளாளர்க் கடைக்கலநான் புகுந்தேனே. 1

சடைமுடியன் சதுர்முகனென் றிவர்முதலாந் தரமெல்லாம் *
அடையவினைப் பயனாகி யழிந்துவிடும் படிகண்டு *
கடிமலராள் பிரியாத கச்சிநக ரத்திகிரி *
இடமுடைய வருளாளர் இணையடிக ளடைந்தேனே. 2

தந்திரங்கள் வேறின்றித் தமதுவழி யழியாது *
மந்திரங்கள் தம்மாலு மற்றுமுள்ள வுரையாலும் *
அந்தரங்கண் டடிபணிவா ரெல்லார்க்கு மருள்புரியும் *
சிந்துரவெற் பிறையவனார் சீலமல்ல தறியேனே. 3

காகமிராக் கதன்மன்னர் காதலிகத் திரபந்து *
நாகமரா னயன்முதலா நாகநக ரார்தமக்கும் *
போகமுயர் வீடுபெறப் பொன்னருள்செய் தமைகண்டு *
நாகமலை நாயகனார் நல்லடிப்போ தடைந்தேனே. 4

உகக்குமவை யுகந்துகவா வனைத்துமொழிந் துறவுகுண *
மிகத்துணிவு பெறவுணர்ந்து வியன்காவ லெனவரித்துச் *
சகத்திலொரு புகலில்லாத் தவமறியேன் மதிட்கச்சி *
நகர்க்கருணை நாதனைநல் லடைக்கலமா யடைந்தேனே. 5

அளவுடையா ரடைந்தார்க்கு மதனுரையே கொண்டவர்க்கும் *
வளவுரைதந் தவனருளே மன்னியமா தவத்தோர்க்கும் *
களவொழிவா ரெமரென்ன விசைந்தவர்க்குங் காவலராம் *
துளவமுடி யருள்வரதர் துவக்கிலெனை வைத்தேனே. 6

உமதடிக ளடைகின்றே னென்றொருகா லுரைத்தவரை *
அமையுமினி யென்பவர்போ லஞ்சலெனக் கரம்வைத்துத் *
தமதனைத்து மவர்தமக்கும் வழங்கியுந்தான் மிகவிளங்கும் *
அமைவுடைய வருளாள ரடியிணையை யடைந்தேனே. 7

திண்மைகுறை யாமைக்கு நிறைகைக்குந் தீவினையால் *
உண்மைமற வாமைக்கு முளமதியி லுகக்குகைக்கும் *
தண்மைகுறை யாமைக்குந் தரிக்கைக்குந் தணிகைக்கும் *
வண்மையுடை யருளாளர் வாசகங்கள் மறவேனே. 8

சுருதிநினை விமையறியுந் துணிவுடையார் தூய்மொழிகள் *
பரிதிமதி யாசிரியர் பாசுரஞ்சேர் தருக்கணங்கள் *
கருதியொரு தெளிவாளாற் கலக்கமறுத் தத்திகிரிப் *
பரிதிமதி நயனமுடைப் பரமனடி பணிந்தேனே. 9

⁂ திருமகளுந் திருவடிவுந் திருவருளுந் தெள்ளறிவும் *
அருமையிலா மையுமுறவு மளப்பரிய வடியரசும் *
கருமமழிப் பளிப்பமைப்புங் கலக்கமிலா வகைநின்ற *
அருள்வரதர் நிலையிலக்கி லம்பெனநா னமிழ்ந்தேனே. 10

⁂ ஆறுபயன் வேறில்லா வடியவர்க ளனைவர்க்கும் *
ஆறுமதின் பயனுமிவை யொருகாலும் பலகாலும் *
ஆறுபய னெனவேகண் டருளாள ரிணையடிமேல் *
கூறியநற் குணவுரைக ளிவைபத்துங் கோதிலவே. 11

அடிவரவு:—பத்தி, சடை, தந்திரம், காகம், உகக்கும், அளவுடையார், உமதடிகள், திண்மை, சுருதி, திருமகள், ஆறு. (அமலன்)

மாயாவாத புஜங்க பங்க கருடாயநமஃ

தேசிகர் திருவடிகளே சரணம்

ஆக ப்ரபந்தம் 7-க்கு பாசுரம்-247.

அடைக்கலப்பத்து ஸம்பூர்ணம்.

---

எட்டாவது

# அர்த்தபஞ்சகம்

கொச்சகக்கலிப்பா

⁂ அமலனவி யாதசுட ரளவில்லா வாரமுதம் *
அமலவுருக் குணங்களணி யாயுதங்க ளடியவர்கள் *
அமலவழி யாதநக ரழிந்தெழுங்கா வுடனெல்லாம் *
கமலையுட னரசாளுங் கரிகிரிமேற் காவலனே. 1

உள்ளபொரு ளனைத்துக்கு முருவநிலை கருமங்கள் *
தெள்ளிசையின் வசமாக்கித் திகழ்ந்துயிரா யுறைகின்றான் *
நள்ளிருள்தீர்த் தடியவர்க்கு நலங்கொடுக்குந் திருவுடனே *
வள்ளலரு ளாளரெனும் வாரணவெற் பிறையவனே. 2

பூதவுடல் புலன்கள்மனம் புல்லாவி புந்தியெனும் *
யாதுமல னுயுலகில் யானெனுமிந் நுண்ணறிவாய்ச் *
சேதனனு யடிமையுமா யுயிர்க்கெல்லாந் திண்ணுயிராய்த் *
தீதலன்றித் திகழுஞ்சீர் அத்திகிரித் திருமாலே. 3

தானடைத்த குணங்கருவி தன்கிரிசை வழியொழுக்கி *
ஊனெடுத்துண் டுமிழ்ந்துழலு முயிர்க்கெல்லா முயிராகிக் *
கானடத்திக் கமலையுடன் கண்டுகந்து விளையாடும் *
தேனெடுத்த சோலைகள்சூழ் திருவத்தி யூரானே. 4

உய்யுமுற விசையாதே யொத்தவர்க்கே யடிமையுமாய்ப் *
பொய்யுருவைத் தனக்கேற்றிப் புலன்கொண்ட பயன்கொண்டும் *
ஐயுறவு மாரிருளு மல்வழியு மடைந்தவர்க்கு *
மெய்யருள்செய் திடுந்திருமால் வேழமலை மெய்யவனே. 5

விதைமுளையி னியாயத்தா லடியில்லா வினையடைவே *
சதையுடல நால்வகையுஞ் சரணளிப்பா னெனத்தவழ்ந்து *
பதவியறி யாதுபழம் பாழிலுழல் கின்றார்க்கும் *
சிதைவிலருள் தருந்திருமால் திருவத்தி நகரானே. 6

யமநியமோ பாசனங்க ளியலாவி புலனடக்கம் *
தமதறியுந் தாரணைகள் தாரையறு நினைவொழுக்கம் *
சமமுடைய சமாதிநலஞ் சாதிப்பார்க் கிலக்காகும் *
அமரர்தொழு மத்திகிரி யம்புயத்தா ளாரமுதே. 7

புகலுலகி லில்லாது பொன்னருள்கண் டுற்றவர்க்கும் *
அகலகில்லா வன்பர்க்கு மன்றேதன் னருள்கொடுத்துப் *
பகலதனுற் பழங்கங்குல் விடிவிக்கும் பங்கயத்தாள் *
அகலகில்லே னென்றுறையு மத்திகிரி யருள்முகிலே. 8

இருவிலங்கு விடுத்திருந்த சிறைவிடுத்தோர் நாடியினுல் *
கருநிலங்கள் கடக்கும்வழி காவலராற் கடத்துவித்துப் *
பெருநிலங்கண் டுயிருணர்ந்து பிரியாம லருள்செய்யும் *
உருநலங்கொண் டுறுந்திருவோ டுயரத்தி கிரியானே. 9

தன்திருமா துடனேதான் தனியரசா யுறைகின்ற *
அந்தமில்பே ரின்பத்தி லடியவரோ டெமைச்சேர்த்து *
முந்தியிழுந் தனவெல்லா முகிழ்க்கத்தந் தாட்கொள்ளும் *
அந்தமிலா வருளாழி யத்திகிரித் திருமாலே. 10

⁂ அயன்பணியு மத்திகிரி யருளாள ரடியிணைமேல் *
நயங்கள்சேர் கச்சிநகர் நான்மறையோர் நல்லருளால் *
பயன்களிவை யனைத்துமெனப் பண்டுரைத்தார் படிபுரைத்த *
வியன்கலைக ளீரைந்தும் வேதியர்கட் கினியனவே. 11

அடிவரவு:—அமலன், உள்ள, பூதவுடல், தானடைத்த, உய்புமுறவு, விதைமுளை, யமநியமம், புகலுலகில், இருவிலங்கு, தன்திருமாது, அயன் பணியும். (வரியிருள்.)

மாயாவாத புஜங்க பங்க கருடாயநம:

தேசிகர் திருவடிகளே சரணம்

ஆக ப்ரபந்தம் 8-க்கு பாசுரம்-258.

அர்த்தபஞ்சகம் ஸம்பூர்ணம்.

## ஒன்பதாவது

# ஸ்ரீவைஷ்ணவதினசரி

கலிவிருத்தம்

வரியிரு ளழிவதர் மனம்வரு முணர்வொடு
கரிகிரி மருவிய கரியவ ரடியிணை
பரிவொடு பரவுநல் லடியவர் பழவுரை
அரியரி யரியரி யரியரி யரியே. 1

வினைவகை யொழுகிய வெறிநிலை யடையவும்
நினைவுடை நிகழெதிர் நிலைநல மணுகிட
வனமுறை கிரிசைகள் மகிழ்மறை நெறிகொடு
தனிமுத லடியிணை யடைபவர் தமரே. 2

மலர்மகள் மருவிய மறுவுடை யிறையவர்
மலரடி கருதிய மனமுடை யடியவர்
மலர்புன லமுதுடன் வகையென வடையவும்
மலர்மதி யெமதல வெனவரு பவரே. 3

நிறையுடை மலர்மகள் நலமுற மருவிய
இறையவ னினிதுற வினியவை யெனுமவர்
அறநெறி யிலனவ னணுகிலு மணுகிலர்
துறையல தெனுமொரு துறைபடு கிலரே. 4

ஒளிமதி யெனவொரு திருவுட னுயர்பவர்
களிர்மதி முகநகை நலநில வுகவுகள்
தெளிபுன லமுதெனச் செழுமதி யடியவர்
குளிமுதல் கிரிசைகள் குறைகிலர் வலதே. 5

வருவதோ ருறவென வளரிள வரசென
மருவுநன் மகனென வனமத கரியென
அருவிலை மணியென வடியவ ரடைபவர்
அருகனை யிறைவனை யருகணை யுடனே. 6

விரைகமழ் மலர்மகள் மிகவுறு மிறையவன்
குரைகழல் குறுகிய குளிர்மதி மதியொடும்
வரைநிலை யடியவர் மறைகளின் மறையெனும்
உரைநிரை பரவுவ ருளமமு துணவே. 7

துதிகளு மறிவரு சுருதியி னிறுதியின்
இதயமி தெனமுனி யிறையவ ருரைகளும்
மதுரம னுதவிய மறைகளு மடியவர்
விதிவகை பரவுவர் மிகவுள மெழவே. 8

அறிவிலர் தலைமிசை யயனடி யெழுதிய
பொறிவகை யெழுவதொர் பொறிநல முகவலர்
உறுவது முடையது மிதுவென மருவதும்
நறுமலர் மகள்பதி நலமுறு நினைவே. 9

ஃ பெருகிய நலநிலை பெருமையின் மிகுமையில்
உருகிய நிலைமன முயர்முகி ழெழுமுடல்
சொருகிய விழிதிகழ் சுடர்மதி புகுமிறை
கருகிய வுருதிகழ் கரிகிரி யரியே. 10

அடிவரவு:—வரியிருள், வினைவகை, மலர்மகள், நிறையுடை, ஒளிமதி, வருவது, விரைகமழ், துதிகளும், அறிவிலர், பெருகிய, (ஈருலகு)

மாயாவாத புஜங்க பங்க கருடாயநம:

தேசிகர் திருவடிகளே சரணம்.

ஆக ப்ரபந்தம் 9-க்கு பாசுரம்-268.

**ஸ்ரீவைஷ்ணவ தினசரி ஸம்பூர்ணம்.**

---

## பத்தாவது

# திருச்சின்னமாலை

### தனியன்கள்

கொச்சகக்கலிப்பா

மன்னுதிரு மந்திரத்தும் வாழ்துவயத் தும்பொருளும்
துன்னுபுகழ்க் கீதைதனில் சொன்னவெண்ணன் கின்பொருளும்
அன்னவயற் கச்சியரு ளாளர்திருச் சின்னமாலை
இன்னபடி யென்றுரைத்தான் எழில்வேதாந் தாரியனே. 1

நேரிசைவெண்பா

ஏகாந்த மூன்று மெழிலா லுரைசெய்து
மாகாந்தஞ் செய்தருளும் வள்ளல்தான்—சாகாந்த
தேசிகனுந் தூப்புல் திருவேங்க டேசகுரு
வாசகமே யெங்களுக்கு வாழ்வு. 2

கட்டளைக் கலித்துறை

பரிச்சின்ன மான விருநா லெழுத்தின்பல் வண்மையெல்லாம்
விரிச்சு நலம்பெற வோதவல் லோர்க்கிந்த மேதினிக்கே
மரிச்சின்ன மீளப் பிறவாமல் வாழ்விக்கு மால்வரதர்
திருச்சின்ன வோசை யினிமையுண் டோமற்றைத் தேவர்கட்கே.

---

எண்சீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்

ஈருலகைப் படைக்கவெண்ணி யிருந்தார் வந்தார்
எழில்மலரோன் தன்னையன்றே யீன்றார் வந்தார்
மாருதமண் ணீராகு மாயோன் வந்தார்
வானொடெரி தானாகு மறையோர் வந்தார்
சூரியர்கள் தம்முடனே துலங்குவார் வந்தார்
சுரர்களுக்கன் றமுதருள்சுந் தரனார் வந்தார்
வாரிதிசூழ் வையகம்வாழ் வித்தார் வந்தார்
வண்மையுடன் வரந்தருவார் வந்தார் தாமே.

அருமறையை யூழிதனில் காத்தார் வந்தார்
அதுதன்னை யன்றயனுக் களித்தார் வந்தார்
தருமவழி யழியாமற் காப்பார் வந்தார்
தாமரையா ளுடனிலங்குந் தாதை வந்தார்
திருவுரையாய்த் தாம்பொருளாய் நிற்பார் வந்தார்
திருவருளாற் செழுங்கலைகள் தந்தார் வந்தார்
மருவலர்க்கு மயக்குரைக்கு மாயோன் வந்தார்
வானேற வழிதந்தார் வந்தார் தாமே.

அனைத்துலகங் காக்குமரு ளாளர் வந்தார்
அனைத்துக்கு மதிபதியாய் நிற்பார் வந்தார்
தினைத்தனையுந் திருமகளை விடாதார் வந்தார்
தேசொத்தார் மிக்காரு மிலாதார் வந்தார்
நினைக்கநமக் கின்னறிவு தந்தார் வந்தார்
நிலைநின்ற வுயிர்தோன்ற நினைந்தார் வந்தார்
எனக்கிவர்நா னிவர்க்கென்ன வினியார் வந்தார்
எழுத்தொன்றிற் றிகழநின்றார் வந்தார் தாமே.

நாம்வணங்கத் தாமிணங்கா நிற்பார் வந்தார்
நம்மையடைக் கலங்கொள்ளு நாதர் வந்தார்

நாமெமக்காம் வழக்கெல்லா மறுப்பார் வந்தார்
நமக்கிதுவென் றுரையாமல் வைத்தார் வந்தார்
சேமமெண்ணி யெம்மையன்பர்க் கடைத்தார் வந்தார்
செழுந்தகவாற் றிண்சரணா மீசர் வந்தார்
காமனைத்துந் தீவினையைத் தவிர்ப்பார் வந்தார்
தமக்கேயா யெமைக்கொள்வார் வந்தார் தாமே. 4

உலகெல்லா முள்ளேவைத் துமிழ்ந்தார் வந்தார்
உலகுடம்பாய்த் தாமுயிராய் நின்றார் வந்தார்
அலைகடலா யானந்த மடைந்தார் வந்தார்
அளவில்லா வருளாழிப் பெருமாள் வந்தார்
திலகமெனுந் திருமேனிச் செல்வர் வந்தார்
செழுங்குணங்க ளிருமூன்று முடையார் வந்தார்
இலகுசுடர் முழுநலமா மினியார் வந்தார்
எல்லார்க்குங் கதியானார் வந்தார் தாமே. 5

அருளாலே விலங்கிரண்டு மழிப்பார் வந்தார்
அஞ்சிறையைக் கழித்தருளு மன்பர் வந்தார்
மருள்வாரா வகைநம்மைக் காப்பார் வந்தார்
வானேற வழிநடத்தி வைத்தார் வந்தார்
தெருளாருந் தெளிவிசும்பு தருவார் வந்தார்
திண்கழற்கீழ் வாழ்ச்சிநமக் கருள்வார் வந்தார்
பொருளான வடிமைநம்மைக் கொள்வார் வந்தார்
பிரியாமற் காத்தளிப்பார் வந்தார் தாமே. 6

அகலகில்லாத் திருமகளா ரன்பர் வந்தார்
அடியிரண்டு மாறாகத் தந்தார் வந்தார்
புகலில்லார் புகலாகும் புனிதர் வந்தார்
பொன்னுலகிற் றிருவுடனே புகழ்வார் வந்தார்
அகிலமெல்லா மானந்த மானார் வந்தார்
அடியிணைக்கீழ் வைத்தடிமை கொள்வார் வந்தார்
பகனடுவே யிரவழைக்க வல்லார் வந்தார்
பகலொன்றா யிரவழித்தார் வந்தார் தாமே. 7

தருமன்விடத் தாந்தூது போனார் வந்தார்
தரணிபொறாத் திண்பாரந் தவிர்த்தார் வந்தார்
அருமறையின் பொருளனைத்தும் விரித்தார் வந்தார்
அஞ்சினநீ யென்னையடை யென்றார் வந்தார்

தருமமெல்லாந் தாமாகி நிற்பார் வந்தார்
 தாமேநம் வினையனைத்துந் தவிர்ப்பார் வந்தார்
பரமெனது நீபுலம்பே லென்பார் வந்தார்
 பார்த்தனுக்குத் தேரூர்ந்தார் வந்தார் தாமே. 8

வஞ்சனைசெய் பூதனையை மாய்த்தார் வந்தார்
 மல்லர்மத கரிமாள மலைந்தார் வந்தார்
கஞ்சனைப்போர்க் கடுஞ்சினத்தாற் கடிந்தார் வந்தார்
 கண்ணுதல்முன் வாணன்தோள் கழித்தார் வந்தார்
வெஞ்சொல்தர வீடுகொடுத் துகந்தார் வந்தார்
 விலக்கில்லா வழிநடத்த விரைந்தார் வந்தார்
பஞ்சவரைப் பலவகையுங் காத்தார் வந்தார்
 பாஞ்சாலி குழல்முடித்தார் வந்தார் தாமே. 9

⁂ அத்திகிரி யருளாளப் பெருமாள் வந்தார்
 ஆனைபரி தேரின்மே லழகர் வந்தார்
கச்சிதனிற் கண்கொடுக்கும் பெருமாள் வந்தார்
 கருதவரந் தருந்தெய்வப் பெருமாள் வந்தார்
முத்திமழை பொழியுமுகில் வண்ணர் வந்தார்
 மூலமென வோலமிட வல்லார் வந்தார்
உத்தரவே திக்குள்ளே யுதித்தார் வந்தார்
 உம்பர்தொழுங் கழலுடையார் வந்தார் தாமே. 10

⁂ மறைத்தலையி லிசையெழுத்தில் வணங்கும் வாக்கில்
 மந்திரத்தி னுலெழுத்தாந் திருநா மத்தில்
நிறைத்திலகு வேற்றுமையி லிரண்டா மொன்றி
 னெடுமால்தன் கீதையெல்லா நிறைந்த சொல்லில்
உறைத்தவர்கண் டுரைத்தபொரு ளான தெல்லாம்
 உயர்விருத வருளாளப் பெருமாள் தேசின்
திறத்திலிவை திருச்சின்ன மாலை பத்துஞ்
 செவிக்கினிதாஞ் சிற்றின்ப மிசையா தார்க்கே. 11

அடிவரவு:—ஈருலகு, அருமறை, அனைத்துலகம், நாம்வணங்க, உலகெல்லாம், அருளாலே, அகலகில்லா, தருமன், வஞ்சனை, அத்திகிரி, மறை. (கேசவன்)

மாயாவாத புஜங்க பங்க கருடாயநம:

தேசிகர் திருவடிகளே சரணம்

ஆக ப்ரபந்தம் 10-க்கு பாசுரம்-279.

**திருச்சின்னமாலை ஸம்பூர்ணம்.**

# பன்னிரு நாமம்



## தனியன்கள்

### கட்டளைக் கலித்துறை

பன்னிரு நாமந் திருவத்தி யூர்ப்பரன் பாதமென்று
நன்னிற நாமம் படைத்திக்கும் யாவையும் நாமறியத்
தென்னந் தமிழ்த்தொடைச் சீரார் கலித்துறை யோதித்தந்தான்
மின்னுறு நூலமர் வேங்கட நாதனென் தேசிகனே. 1

கார்கொண்ட மேனியன் பாதாம்புயத்தைக் கருத்தில்வைத்து
ஏர்கொண்ட கீர்த்தி யிராமா நுசனைச் சிரத்தில்தொழும்
சீர்கொண்ட தூப்புல் திருவேங்க டாரியன் சீர்மொழியை
ஆர்கொண்டு போற்றினு மம்மால் பதத்தை யடைவிக்குமே. 2

---

### கட்டளைக் கலித்துறை

ஸ்ரீ கேசவ னய்நின்று கீழைத் திசையினு நெற்றியினும்
தேசுடை யாழிகள் நான்குடன் செம்பசும் பொன்மலைபோல்
வாச மிகுத்தென்னை மங்காமற் காக்கு மறையதனால்
ஆசை மிகுத்த வயன்மக வேதியி லற்புதனே. 1

நாரண னய்நல் வலம்புரி நாலு முகந்தெடுத்துக்
காரணி மேக மெனவே யுதரமு மேற்குநின்று
ஆரண நூல்தந் தருளா லடைக்கலங் கொண்டருளும்
வாரண வெற்பின் மழைமுகில் போனின்ற மாயவனே. 2

மாதவ நாமமும் வான்கதை நான்கு மணிநிறமும்
ஓது முறைப்படி யேந்தி யுரத்தினு மேலுநல்கிப்
போதலர் மாதுடன் புந்தியி லன்பாற் புகுந்தளிக்கும்
தூதனு நாதனு மாயதொல் லத்தி கிரிச்சுடரே. 3

கோவிந்த னென்னும் குளிர்மதி யாகிக் கொடியவரை
ஏவுந் தனுக்க ளுடன்தெற் கினுமுட் கழுத்துநின்று
மேவுந் திருவரு ளால்வினை தீர்த்தெம்மை யாண்டருளும்
பூவன் றொழுவத்தி மாமலை மேனின்ற புண்ணியனே. 4

விட்டு வலவயிற் றின்கண் வடக்கு விடாதுநின்று
மட்டவிழ் தாமரைத் தாது நிறங்கொண்ட மேனியனைத்
தொட்டக லப்பைக ளீரிரண் டாலுந் துயரறுக்கும்
கட்டெழில் சோலைக் கரிகிரி மேனின்ற கற்பகமே. 5

மதுசூ தனனென் வலப்புயந் தென்கிழக் கென்றிவற்றில்
பதியா யிருந்துபண் மாதுறை பங்கய வண்ணனுமாய்
முதுமா வினைக ளறுக்கு முயலங்க ளீரிரண்டால்
மதுவா ரிளம்பொழில் வாரண வெற்பின் மழைமுகிலே. 6

திருவிக்கிரமன் றிகழ்தீ நிறத்தன் றெளிவுடைவாள்
உருவிக் கரங்களி லீரிரண் டேந்தி வலக்கழுத்தும்
செருவிக் கிரமத் தரக்கர்திக் குஞ்சிறந் தாடுமிறை
மருவிக் கரிகிரி மேல்வரந் தந்திடு மன்னவனே. 7

வாமன னென்றன் வாமோ தரமும்வா யுவின்றிசையும்
தாம மடைந்து தருண வருக்க னிறத்தனுமாய்ச்
சேம மரக்கலஞ் செம்பவி யீரிரண் டாற்றிகழும்
நாமங்கை மேவிய நான்முகன் வேதியி னம்பரனே. 8

சீரார் சிரீதர னுய்ச்சிவன் றிக்கு மிடப்புயமும்
ஏரா ரிடங்கொண் டிலங்குவெண் டாமரை மேனியனைப்
பாராய பட்டய மீரிரண் டாலும் பயமறுக்கும்
ஆரா வமுதத்தி மாமலை மேனின்ற வச்சுதனே. 9

என்னிரு டிகேச னிறைக்கீ ழிடக்கழுத் தென்றிவற்றில்
நன்னிலை மின்னுரு வாய்நாலு முற்கரங் கொண்டளிக்கும்
பொன்னகில் சேர்ந்தலைக் கும்புனல் வேகை வடகரையில்
தென்ன னுகந்து தொழுந்தேன வேதியர் தெய்வமொன்றே. 10

எம்பற்ப நாபனுமென்பின் மனம்பற்றி மன்னிநின்று
அம்பொற் கதிரவ னையிர மேவிய மெய்யுருவாய்
அம்பொற் கரங்களி லைம்படை கொண்டஞ்ச லென்றளிக்கும்
செம்பொற் றிருமதிள் சூழ்சிந்து ராசலச் சேவகனே. 11

தாமோ தரனென்றன் னாமங்க ளாலு கரங்களிற்கொண்
டாமோ தரமென வாகத்தி னுட்புறம் பிற்கழுத்தும்
தாமோ ரிளங்கதி ரோவென்ன வென்னு ளிருளறுக்கும்
மாமோக மாற்று மதிளத்தி யூரின் மரகதமே. 12

⁂ கற்றுத் திரியுங் கலைகளை வெல்லுங் கருத்தில்வைத்துப்
பத்திக் குறுதுணை பன்னிரு நாமம் பயில்பவர்க்கு
முத்திக்கு மூல மெனவே மொழிந்தவிம் மூன்றுநான்கும்
தித்திக்கு மெங்கள் திருவத்தி யூரரைச் சேர்பவர்க்கே. 13

மாயாவாத புஜங்க பங்க கருடாய நம:
தேசிகர் திருவடிகளே சரணம்
ஆக ப்ரபந்தம் 11-க்கு பாசுரம்-292.

**பன்னிருநாமம் ஸம்பூர்ணம்.**

---

## பன்னிரண்டாவது

# திருமந்த்ரச்சுருக்கு

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்

⁂ நாவலர் மறைநா லொன்று நலந்திகழ் மறையென் றோர
தாவலுப் பலைக்கு மோகத் தழுந்திநின் றலமரு கின்றீர்
தூவலம் புரியா மொன்றிற் றுலக்கமாமணி வண்ண மொன்றால்
காவலென்ற கரத் தகவாய்க் கருத்துறக் காண்மி னீரே. 1

இளக்கமின் மயக்கந் தன்னு லெனக்குநா னுரியே னென்னும்
களக்கருத் தொன்றே கொண்டு கடுநர கடைந்து நின்றீர்
விளக்குமவ் வெழுத்தி னுலாம் வேற்றுமை யேற்றி வாங்கித்
துளக்கமி லடிமை பூண்டுத் தூயராய் வாழ்மி னீரே. 2

அப்பொரு ளிகழ்ந்து மற்றுங் கழித்தழிந் தெழுவார் தாளில்
இப்பொரு ளிகழ்ந்த வன்பா லிரங்கிநீர் வணங்கி வீழ்வீர்
உட்பொரு ளுள்ளி மற்றோ ருயிர்களுக் குரிமை மாற்றி
எப்பொருள் பயனு மீதென் றெண்ணிநீ ரெழுமி னீரே. 3

என்றுமோ ரேதமின்றி யிரவியு மொளியும் போல
ஒன்றிநின் றுலகளிக்கு முகமிகழ்ந் தடிமை வைத்தீர்
ஒன்றுமூன் றெழுத்தா யொன்று மொன்றிலொன் றுடைய முன்னே
யொன்றிய விரண்டை யுள்ளி யுளரென வுய்மி னீரே. 4

தத்துவ மறுநான் கோடு தனியிறை யின்றி நின்ற
சித்தினை யுணரா தென்றுந் திரடோகை யாகி நின்றீர்
மத்தனைத் தனிவி டாதே மையிலா விளக்க மாக்கி
உத்தம னடிமை யான வுயிர்நிலை யுணர்மி னீரே. 5

தனதிவை யனைத்து மாகத் தானிறை யாகு மாயன்
உனதெனு முணர்த்தி தாரா துமக்குநீ ருரிமை யுற்றீர்
எனதிவை யனைத்தும் யானே யிறையெனு மிரண்டு நீர
மனவெனு மிரண்டின் மாறு வல்வினை மாற்று வீரே. 6

அழிவிலா வுயிர்கட் கெல்லா மருக்கனு யழியா வீசன்
வழியலா வழிவி லக்கு மதியெழு மாய மூர்த்தி
வழுவிலா திவைய னைத்தும் வயிற்றில்வைத் துமிழ்ந்த மாலை
நழுவிலா நார வாக்கில் நாடிநீர் நணுகு வீரே. 7

வயனமொன் றறிந்து ரைப்பார் வன்கழல் வணங்க வெள்கி
நயனமுள் ளின்றி நாளு நள்ளிருள் நண்ணி நின்றீர்
அயனமிவ் வனைத்துக் குந்தா னவைதனக் கயன மென்றப்
பயனுமாய்ப் பதியு மான பரமனைப் படிமி னீரே. 8

உயர்ந்தவ ருணர்ந்த வாற்று லுகந்தகுற் றேவ லெல்லாம்
அயர்ந்துநீ ரைம்பு லன்கட் கடிமைபூண் டலமரு கின்றீர்
பயந்திவை யனைத்து மேந்தும் பரமனுர் நாம மொன்றில்
வியந்தபே ரடிமை தோன்றும் வேற்றுமை மேவு வீரே. 9

✠ எண்டிசை பரவுஞ் சீரோ ரெங்களுக் கீந்த வெட்டில்
உண்டவா றுரைப்பார் போல வொன்பது பொருளு ரைத்தோம்
பண்டுநான் மறையோர் காக்கு மாநிதி யிவைய னைத்தும்
கண்டவர் விள்ளார் விள்ளக் கருதுவார் காண்கி லாரே. 10

அடிவரவு:—நாவலர், இளக்கமில், அப்பொருள், என்னுமோர், தத்துவம், தனது, அழிவிலா, வயனம், உயர்ந்த, எண்டிசை. (இன்னமுதில்)

மாயாவாத புஜங்க பங்க கருடாயநமஃ

தேசிகர் திருவடிகளே சரணம்

ஆக ப்ரபந்தம் 12-க்கு பாசுரம்-302.

**திருமந்த்ரச்சுருக்கு ஸம்பூர்ணம்.**

பதின்மூன்றாவது

# துவயச்சுருக்கு

கட்டளைக் கலித்துறை

இன்னமு திற்பிறந் தாளிதங் கேட்க வுரைத்தபிரான்
பொன்னரு ளால்மறை மௌலியிற் பூண்ட விரண்டிசைத்து
தன்னுரை மிக்க தனமி தெனத்தந்த வேதகத்தில்
துன்னு பொருள்கள்பத் துந்தொலை யாநிதி யாகின்றவே. 1

அருவுரு வானவை தன்னை யடைந்திடத் தானடைந்து
வெருவுரை கேட்டவை கேட்பித் தகற்றும் வினைவிலக்கி
இருநிலை யன்புத னாலெம்மை யின்னடி சேர்த்தருளும்
திருவுட னேதிகழ் வார்சிறந் தாரெங்கள் சிந்தையுள்ளே. 2

ஒருயி ராய்நின்ற வொண்சுட ரின்ப வுருத்தனிலும்
பேருரு வத்திலும் பின்னதில் தோற்று முருக்களிலும்
ஓருரு வான வுலகினு மேற்கு முருக்களினால்
சேருதல் மன்னுசெய் யாளன்பர் நம்மனஞ் சேர்ந்தனரே. 3

காரண மாயிறை யாய்க்கதி யாய மரும்பதியாய்
ஆரண மோது மனைத்துற வாயக லாவுயிராய்ச்
சீரணி புஞ்சுட ராய்ச்சிறந் தெங்குந் திகழ்ந்துநின்ற
நாரண னார்நமக் காய்நல்கி நாந்தொழ நின்றனரே. 4

வானமர் மன்னுரு வாய்வகை யாலதில்நா லுருவாய்
மீனம தாமைகே ழல்முத லாம்விப வங்களுமாய்
ஊனம ருள்ளுரு வாயொளி யாதவ ருச்சையுமாய்த்
தேனமர் செங்கழ லான்சேர்த் தனன்கழ லென்மனத்தே. 5

வேறொ ரணங்கு தொழும்வினை தீர்த்தெம்மை யாண்டிடுவான்
ஆறு மதின்பய னுந்தந் தளிக்கு மருளுடையான்
மாறில தாயில கும்மது மெல்லடிப் போதிரண்டால்
நாறு துழாய்முடி யானமக் குச்சர ணாயினனே. 6

பெறுவது நாம்பெரி யோர்பெறும் பேறென நின்றவெம்மை
வெறுமை யுணர்த்தி விலக்காத நன்னிலை யாதரிப்பித்
துறுமதி யால்தன்னை யொண்சர ணென்ன வுணர்வுதந்த
மறுவுடை மார்பனுக் கேமன் னடைக்கல மாயினமே. 7

அருமறை யாதுந் துறவோமென் றேயறிந் தார்கவரும்
கருமமு ஞானமுங் காதலுங் கண்டு முயலகில்லோம்
வருவது மிங்கிலை யாய்மைய லுற்றவெ மக்குளதோ
திருமக ளார்பிரி யாத்திரு மாலன்றி நற்சரணே. 8

சுருங்கா வகலமெல் லாந்துளங் காவமு தக்கடலாய்
நெருங்கா தணைத்துட னேநின்ற நந்திரு நாரணனார்
இரங்காத காலங்க ளெல்லா மிழந்த பயன்பெறவோர்
பெருங்காத லுற்றினி மேல்பிரி யாமை யுகந்தனமே. 9

கடிசூடு மூன்றுங் கழல்பணிந் தார்க்குக் கடிந்திடவே
முடிசூடி நின்ற முகில்வண்ண னார்முன் னுலகளந்த
அடிசூடி நாமவ ராதரத் தாலுடுத் துக்களையும்
படிசூடி யன்புட னேபணி செய்யப் பணிந்தனமே. 10

தனதன் றிவையெனத் தானன் றெனமறை சொன்னதெல்லாம்
தனதென்றுந் தானென்று மெண்ணுத லால்வரு மீனமெல்லாம்
மனதொன்றி யின்று நமவென்ற தேகொண்டு மாற்றுதலால்
தனதன்றி யொன்றுமில் லாத்தனித் தாதை சதிர்த்தனனே. 11

⁂ சேர்க்குந் திருவாளர் சேர்த்தியின் மன்னுதல் சீர்ப்பெரியோர்க்கு
ஏற்குங் குணங்க ளிலக்காம் வடிவி லிணையடிகள்
பார்க்குஞ் சரணத்திற் பற்றுத லன்னிலை நாம்பெறும்பேறு
ஏற்கின்ற வெல்லைக ளெல்லாங் களையற வெண்ணினமே. 12

அடிவரவு:—இன்னமுதில், அருவுரு, ஒருயிர், காரணம், வானமர், வேறொரு, பெறுவது, அருமறை, சுருங்கா, கடிசூடு, தனதன்று, சேர்க்கும். (கல்லார்)

மாயாவாத புஜங்க பங்க கருடாயநமஃ

தேசிகர் திருவடிகளே சரணம்

ஆக ப்ரபந்தம் 13-க்கு பாசுரம்-314

த்வயச்சுருக்கு ஸம்பூர்ணம்.

# பதினான்காவது

# சரமச்லோகச்சுருக்கு

கட்டளைக் கலித்துறை

கல்லா ரகலுங் கருமமு ஞானமுங் காதலுமற்
றெல்லா நிலைகளுக் கேற்க விதித்த கிரிசைகளும்
வல்லார் முயல்க வலியிழந் தாரென் றனைத்தொழுகென்று
யெல்லாத் தரும முரைத்தவ ரின்னடி சேர்ந்தனமே. 1

வெறுமை யுணர்ந்தது முன்னிட்டு வேறங்க மில்லையெனக்
குறியவ னின்னவை யெட்டக் குதித்திடுங் கோனைத்துறந்து
உறுமய னத்திர மென்னப் பொருநிலை யோர்ந்திடவோர்
அறநெறி யன்றுரைத் தான்அழி யாவற மாயினனே. 2

வாரிதி விட்டு மலர்மக ளோடு மதுரைவந்து
பாரத வெஞ்சமர் பார்மகள் பாரஞ் செகவுகந்து
சாரதி யாய்முன்பு தூதனு மாய்த்தள ரும்விசயன்
தேரதி னின்றவ னைத்தேற்றி னுன்திற மாயினமே. 3

தன்னரு ளால்பெருஞ் சாதனஞ் சாதக னென்றிவற்றைத்
தன்னுட னெண்ணுத னீங்கத் தமர்க்கொரு சாதனமாய்ப்
பொன்னரு ளோடுமப் பூமக ளோடும் புகழநின்ற
வின்னுரை யீசனை யேயேக மெண்ண விசைந்தனமே. 4

ஊனி லிணைத்துழல் விக்கும் வினைக்கட லுள்விழுந்த
யானென தான குணங்க ளெனக்கிசை நல்வழியும்
தானுத வித்தனைத் தந்திட நின்ற தனித்தருமம்
நானினி வேறோர் பரநனு காவகை நல்கின்றதே. 5

கடுவினை நாம்பெறும் பேற்றைத் தகைந்தமை கொண்டுநம்மேல்
நடைவில காம விசைந்தொரு காலந் துணிவுடனே
உடைமை யடைக்கல மாக வடைக்கு முகப்பதனால்
அடையென வென்றுரைத் தானடை வித்தனன் றன்னடியே. 6

கானென்ற வேதங்கள் கற்கும் பரனென்று காட்டநின்ற
தானென் றறியகி லார்க்கறி விக்குந் தனித்திறலோன்
வானென்றி னோடு மானிட னென்ன வவதரிப்பான்
நானென்ற நந்திரு மால்நம்மை நற்பதஞ் சேர்த்திடுமே. 7

தன்னிலை காட்டித் தனிமை யுகந்து தனித்தகவால்,
நன்னிலை தீர வடைக்கலங் கொண்டடி சேர்த்திடவே
பன்னிலை மூல வெழுத்திலும் பாண்டவர் தேர்தனிலும்
முன்னிலை கொண்ட பிரானெம்மை முன்னிலை கொண்டனனே.

காடுக ளோநர கோகடி தாங்கர ளத்திரளோ
சூடுவி டாவன லோதொலை யாநிலை நள்ளிருளோ
பாடுப டச்சர ணலன்று சாடிய சாரதியார்
வீடுசெய் வித்துநம் மைவிடு விக்கின்ற பாவங்களே.

சென்றுயர் வானமர்ந் தவ்வடி யாருடன் சேர்ந்திடவே
இன்றெனி லின்றுநா ளையெனி ணளை யினிச்செறிந்து
நின்ற நிலைநின் றனைத்து வினையுநின் விட்டகலக்
கன்றி விடுப்பனென் றுன்கருத் தால்நம்மைக் காத்திடுமே.

ஃ அறிவு மனைத்து மிலாவடி யோமை யடைக்கலங்கொண்டு
உறவென நின்றதெல் லாமுற வேநின்ற தானெமக்காய்
மறுபிற வித்துயர் வாரா வகைமனங் கொண்டகலா
இறையவ னின்னரு ளாலெங்கள் சோகந் தவிர்த்தனனே.

அடிவரவு:—கல்லார், வெறுமை, வாரிதி, தன்னருளால், உகடுவினை, கானென்ற, தன்னிலை, காடுகளோ, சென்றுயர், ஃ (கருமமும்)

மாயாவாத புஜங்க பங்க கருடாயநம:
தேசிகர் திருவடிகளே சரணம்
ஆக ப்ரபந்தம் 14-க்கு பாசுரம்-325.
**சரமச்லோகச்சுருக்கு ஸம்பூர்ணம்.**

---

பதினைந்தாவது

# கீதார்த்தஸங்க்ரஹம்

தனியன்கள்

நேரிசைவெண்பா

கட்டப் பொருள்விரித்த காசினியி னுன்மறையில்
இட்டப் பொருளியம்பு மின்பொருளைச்—சிட்டர்தொழும்
வேதாந்த தேசிகனை மேவுவார் தங்கள்திருப்
பாதாம் புயமடியேன் பற்று.

வெண்செந்துறை

கீதை மொழிந்தருளும் வேதாந்த தேசிகனார்
பாதார விந்தமலர் பத்தியுடனென் பற்று. 2

கட்டளைக் கலித்துறை

⁂ கருமமு ஞானமுங் கொண்டெழுங் காதலுக் கோரிலக்கென்று
அருமறை யுச்சியு ளாதரித் தோது மரும்பிரமம்
திருமக ளோடு வருந்திரு மாலென்று தானுரைத்தான்
தரும முகந்த தனஞ்சய னுக்கவன் சாரதியே. 1

உகவை யடைந்த வுறவுடை யாருற வற்றவந்நாள்
தகவுடை யன்பு கரைபுர ளத்தரு மத்தளவில்
மிகவுள மஞ்சி விழுந்தடி சேர்ந்த விசயனுக்கோர்
நகையுட னுண்மை யுரைக்க வமைந்தனர் நாரணரே. 2

உடல மழிந்திடு முள்ளுயி ரொன்றழி யாதெனைப்போல்
விடுமது பற்று விடாத தடைத்த கிரிசைகளே
கடுக வுனக்குயிர் காட்டு நினைவத னுளதாம்
விடுமய லென்று விசயனைத் தேற்றினன் வித்தகனே. 3

சங்கந் தவிர்ந்து சகஞ்சதிர் பெற்ற தனஞ்சயனே
பொங்குங் குணங்கள் புணர்ப்பனைத் தும்புக விட்டவற்றுள்
நங்கண் ணுரைத்த கிரிசையெல் லாமென வுந்நவின்றார்
எங்கும் மறிவர்க ளேயென்று நாத னியம்பினனே. 4

பிறவாமை தந்திடத் தானே பிறக்கும் பெருமைகளும்
துறவாக் கிரிசைகள் தூய்மதி தன்னால் துலங்குகையும்
இறவா வுயிர்நிலை யுங்கண் டிடுமுல கின்னிலையும்
மறைவாழி மாயவ னேயெனக் கின்றறி வித்தனனே. 5

கண்டெளி தாங்கரு மம்முயிர் காட்டுங் கடுகுதலும்
மண்டிய தன்படி யின்மனங் கொள்ளும் வரிசைகளும்
கண்டறி யாவுயி ரைக்காண லுற்ற நினைவுகளும்
வண்டுவ ரீச னியம்பினன் வாசவன் மைந்தனுக்கே. 6

யோக முயற்சியும் யோகிற் சமநிலை நால்வகையும்
யோகி னுபாயமும் யோகுதன் னல்வ ரும்பேருளும்
யோகு தனில்தன் திறமுடை யோகுநன் முக்கியமும்
நாகணை யோகி நவின்றனன் நன்முடி வீரனுக்கே. 7

தானின்ற வுண்மையைத் தன்தனி மாயை மறைத்தமையும்
தானன்றி மாயை தனைத்தவிர்ப் பான்விர கற்றமையும்
மேனின்ற பத்தர்கள் நால்வரின் ஞானிதன் மேன்மைகளும்
தேனின்ற செங்கழ லான்தெளி வித்தனன் பார்த்தனுக்கே. 8

ஆராத செல்வமு மாருயிர் காணு மரும்பயனும்
பேராத தன்கழற் கீழம ரும்பெரு வாழ்ச்சிகளும்
சோரா துகந்தவர் தூய்மதி கொள்வதுஞ் செய்வனவும்
தேரா விசயனுக் குத்திரு நாரணன் செப்பினனே. 9

தன்மேன் மையுந்தன் பிறப்பில் தளராத் தனிமையையும்
பன்மேனி நண்ணினன் பால்பிரி யாவன்ப ராசைகளும்
புன்மேனி விண்ணவர் பால்புரி யாததன் பத்தியையும்
நன்மேனி நாரணன் தான்நர னுக்கு நவின்றனனே. 10

எல்லையில் லாததன் சீலமு மின்னமு தக்கடலும்
எல்லையில் லாத விபூதியெல் லாந்தன தானமையும்
எல்லையில் லாதபத் தியெழு விக்கத் திருவருளால்
எல்லையி லீச னியம்பினன் இந்திரன் மைந்தனுக்கே. 11

எல்லாந் தனக்குரு வாயிலங் கும்வகை தானுரைத்துச்
சொல்லா லறிந்தது சோராமற் கண்டிட வேண்டுமென்ற
வில்லாள னுக்கன்று மெய்க்கண் கொடுத்தது வேறுமுண்டோ
நல்லார்கள் காண்பரென் றுநவின் றுனங்கள் நாயகனே. 12

தன்கழ லிற்பத்தி தாழா ததுமதின் காரணமாம்
இன்குணர் சிந்தைபு மீதறி யார்க்கவ் வடிமைகளும்
தன்கரு மங்க ளறியாத வர்க்கு லகுநிலையும்
தன்கழ லன்பர்க்கு நல்லவன் சாற்றினன் பார்த்தனுக்கே. 13

ஊனின் படியு முயிரின் பிரிவு முயிர்பெறுவார்
ஞானம் பெறுவகை யுஞ்ஞான மீன்ற வுயிர்ப்பயனும்
ஊனின் றதற்கடி யுமுயிர் வேறிடு முள்விரகும்
தேனின்ற பாதன் தெளிவித்த னன்சிலைப் பார்த்தனுக்கே. 14

முக்குண மேயுயிர் முற்றவுங் கட்டிட மூண்டமையும்
முக்குண மேயனைத் தும்வினை கொள்ள முயன்றமையும்
முக்குண மாயை கடத்தலு முக்கதி தந்தளிப்பும்
முக்குண மற்ற பிரான்மொழிந் தான்முடி யோன்தனக்கே. 15

மூவெட் டிலுமதின் மோக மடைந்த வுயிர்களிலு
நாவெட் டெழுத்தொடு நல்வீடு நண்ணின நம்பரிலும்
மேவெட் டுவன்குண விண்ணோர் களிலும் விசயனுக்குத்
தாவிட் டுலகளந் தான்தன்னை வேறென்று சாற்றினனே. 16

ஆணை மறுதவர் தேவரல் லாவழக் கோரசுரர்
கோணை மறுத குணச்செல்வ னீகுறிக் கொள்மறையைப்
பேணிய தத்துவ மும்பிணி யற்ற கிரிசைகளும்
காணித னல்விச யாவென்று கண்ண னியம்பினனே. 17

மறைபொருந் தாதவை வல்லசு ரர்க்கு வகுத்தமையும்
மறைபொருந் துங்நிலை யும்வன் குணப்படி மூவகையும்
மறைநிலை தன்னை வகுக்குங் குறிமூன்றின் மேன்மையையும்
மறையுமிழ்ந் தானுரைத் தான்வாச வன்தன் சிறுவனுக்கே. 18

சத்துவ வீடுடை நற்கரு மந்தா னுகந்தமையும்
சத்துவ முள்ளது தான்குறிக் கொள்வகை செய்தனவும்
சத்துவ நற்கிரி சைப்பய னுஞ்சர ணாகதியும்
சத்துவ மேதரு வானுரைத் தான்தனிப் பார்த்தனுக்கே. 19

வன்பற் றறுக்கு மருந்தென்று மாயவன் தானுரைத்த
இன்பக் கடலமு தாமென நின்றவிக் கீதைதன்னை
அன்பர்க் குரைப்பவர் கேட்பவ ராதரித் தோதுமவர்
துன்பக் கடலில் துளங்குகை நீங்கித் துலங்குவரே. 20

⁂ தீதற்ற நற்குணப் பாற்கடல் தாமரைச் செம்மலர்மேல்
மாதுற்ற மாயன் மருவவின் கீதையின் வண்பொருளைக்
கோதற்ற நான்மறை மௌலியி னுசிரி யன்குறித்தான்
காதற் றுணிவுடை யார்கற்கும் வண்ணங் கருத்துடனே. 21

அடிவரவு:—கருமம், உகவை, உடலம், சங்கம், பிறவாமை, கண்டெளிது, யோக, தானின்ற, ஆராத, தன்மேன்மை, எல்லையில்லாத, எல்லாம், தன்கழலில், ஊனின்படி, முக்குணம், மூவெட்டில், ஆணைமறுதவர், மறை, சத்துவம், வன்பற்ற, தீதற்ற. (அருள்தரும்)

மாயாவாத புஜங்க பங்க கருடாயநமஃ
தேசிகர் திருவடிகளே சரணம்
ஆக ப்ரபந்தம் 15-க்கு பாசுரம்-346.

**கீதார்த்தஸங்க்ரஹம் ஸம்பூர்ணம்.**

## பதினாறுவது
# மும்மணிக்கோவை

—∞∞—

நிலமண்டிலவாசிரியப்பா

⁂ அருடரு மடியவர் பால்மெய்யை வைத்துத் *
தெருடர நின்ற தெய்வநா யக * நின்
அருளெனுஞ் சீரோ ரரிவையா னதென *
இருள்செக வெமக்கோ ரின்னொளி விளக்காய் *
மணிவரை யன்ன நின்திரு வுருவில் *
அணியம ராக வலங்கலா யிலங்கி *
நின்படிக் கெல்லாந் தன்படி யேற்க *
அன்புட னுன்னோ டவதரித் தருளி *
வேண்டுரை கேட்டு மீண்டவை கேட்பித் *
தீண்டிய வினைகள் மாண்டிட முயன்று *
தன்னடி சேர்ந்த தமருனை யணுக *
நின்னுடன் சேர்ந்து நிற்குநின் திருவே.

நேரிசைவெண்பா

திருமா லடியவர்க்கு மெய்யனுர் * செய்ய
திருமா மகளென்றுஞ் சேரும் *—திருமார்பில்
இம்மணிக் கோவையுட னேற்கின்ற ரென்றன் *
மும்மணிக் கோவை மொழி.

கட்டளைக் கலித்துறை

மொழிவார் மொழிவன மும்மறை யாகு மயிந்தையில்வந்து
இழிவா ரிழிகவென் றின்னமு தக்கட லாகிநின்ற
விழிவா ரருள்மெய்யர் மெல்லடி வேண்டிய மெல்லியர்மேல்
பொழிவார நங்கர்தம் பூங்கரும் புந்திய பூமழையே.

நிலமண்டிலவாசிரியப்பா

மழையயி லெழுந்த மொக்குள்போல் வையம் *
அழியவொன் றழியா வடியவர் மெய்ய *
அருமறை யின்பொரு ளாய்ந்தெடுக் குங்கால் *
திருவுட னமர்ந்த தெய்வ நாயக *
நின்திருத் தனக்கு நீதிரு வாகி *
இந்துதன் னிலவுட னிலங்குதன் மையினை *

நந்துத லில்லா நல்விளக் காகி *
அந்தமி லமுத வாழியாய் நிற்றிப் *
பாற்கடல் தன்னில் பன்மணி யன்ன *
சீர்க்கணஞ் சேர்ந்த சிலமேல் லையிலை *
அடியவர் பிழைகள் நின்கருத் தடையா *
தடையவாண் டருளு மரசனு நீயே *
உயர்ந்தநீ யுன்னை யெம்முடன் கலந்தனை *
அயிந்தைமா நகரி லமர்ந்தனை யெமக்காய்ச் *
சித்திர மணியெனத் திகழுமன் னுருவில் *
அத்திர மணியென வணைத்துநீ யணுகி *
விண்ணினு ளமர்ந்த வியனுரு வதனால் *
எண்ணிய வீரிரண் டுருக்களு மடைதி *
பன்னிரு நாமம் பலபல வுருவாய் *
என்னுரு வெங்கு மெய்திநீ நிற்றி *
மீனோ டாமை கேழல்கோ ளரியாய் *
வானூர் குறளாய் மழுப்படை முனியாய்ப் *
பின்னு மிராம ரிருவராய்ப் பாரில் *
துன்னிய பரந்தீர் துவரைமன் னனுமாய்க் *
கலிதவிர்த் தளிக்குங் கற்கியாய் மற்றும் *
மலிவதற் கென்றும் வல்வினை மாற்ற *
நானா வுருவங் கொண்டுநல் லடியோர் *
வானா ரின்ப மிங்குற வருதி *
ஓருயி ருலகுக் கென்னுநீ திருவோடு *
ஓருயி ரெல்லா மேந்தியின் புறுதி *
யாவரு மறியா தெங்குநீ கரந்து *
மேவுருச் சூழ்ந்து வியப்பினுன் மிகுதி *
கொண்டிட வெம்மை யடைக்கல முலகில் *
கண்டிலங் கதியுனை யன்றிமற் றென்றும் *
பல்வகை நின்ற நின்படி யனைத்தில் *
தொல்வகை காட்டுந் துணிந்ததூ மறையே. 4

நேரிசைவெண்பா

தூமறையி னுள்ளந் துளங்காத் துணிவுதரும் *
ஆமறிவா லார்ந்தடிமை யாகின்றோம் *—பூமறையோன்
பாரா யணத்திற் பணிபு மயிந்தைநகர் *
நாரா யணனார்க்கே நாம், 5

கட்டளைக் கலித்துறை

ஆர்க்குங் கருணை பொழிவா னயிந்தையில் வந்தமர்ந்த *
கார்க்கொண் டலைக்கண்ட காதற் புனமயில் கண்பனியா *
வேர்க்கு முகிழ்க்கும் விதிர்விதிர்க் கும்வெள்கி வெவ்வுயிர்க்கும் *
பார்க்கின் றவர்க்கிது நாமென்கொ லென்று பயிலுவமே. 6

நிலமண்டிலவாசிரியப்பா

பயின்மதி நீயே பயின்மதி தருதலின் *
வெளியு நீயே வெளியுற நிற்றலின் *
தாயு நீயே சாயைதந் துகத்தலின் *
தந்தையு நீயே முந்திநின் றளித்தலின் *
உறவு நீயே துறவா தொழிதலின் *
உற்றது நீயே சிற்றின்ப மின்மையின் *
ஆறு நீயே யாற்றுக் கருடலின் *
அறமு நீயே மறநிலை மாய்தலின் *
துணைவனு நீயே யிணையில்லை யாதலின் *
துய்யனு நீயே செய்யா ளுறைதலின் *
காரண நீயே நாரண னாதலின் *
கற்பக நீயே நற்பதந் தருதலின் *
இறைவனு நீயே குறையொன் றிலாமையின் *
இன்பமு நீயே துன்பந் துடைத்தலின் *
யானு நீயே யென்னு ளுறைதலின் *
எனது நீயே யுனதன்றி யின்மையின் *
நல்லாய் நீயே பொல்லாங் கிலாமையின் *
வல்லாய் நீயே வையமுண் டுமிழ்தலின் *
எங்க ணுமாகு மெய்யநின் வியப்பே *
அங்ஙனே யொக்க வறிவதா ரணமே. 7

நேரிசைவெண்பா

ஆரணங்கள் தேட வயிந்தைநகர் வந்துதித்த *
காரணராய் நின்ற கடல்வண்ணர் *—நாரணனார்
இப்படிக்கு மிக்கன் றெடுத்தபா தங்கமுவ *
மெய்ப்படிக்க மானதுபொன் வெற்பு. 8

கட்டளைக் கலித்துறை

வெற்புட னென்றி யயிந்தையில் வெவ்வினை தீர்மருந்தொன்று
அற்புத மாக வமர்ந்தமை கேட்டருள் வேண்டிநிற்கப்

பற்பின் பதார்த்தசெய் யாள்டடி சாட்டிய டண்டுடையெம்
விற்புரு வக்கொடிக் கோர்விலங் காமயல் பெற்றனமே. 9

நிலமண்டிலவாசிரியப்பா

❀ பெற்றனை நீயே மற்றுள தெல்லாம் *
பெறுவது நின்னை யுறுவது கொள்வார் *
நின்னா லன்றி மன்னா ரின்பம் *
நின்பொ ருட்டுநீ யென்பொருட் டில்லை *
நின்னுரு நின்று மின்னுருத் தோன்றும் *
நின்தனக் குரிகர் நின்னடி யடைவார் *
நின்பா லன்றி யன்பா லுய்யார் *
வாரண மழைக்க வந்தகா ரணமே. 10

மாயாவாத புஜங்க பங்க கருடாயநம:

தேசிகர் திருவடிகளே சரணம்

ஆக ப்ரபந்தம் 16-க்கு பாசுரம்-356.

மும்மணிக்கோவை ஸம்பூர்ணம்.

---

## பதினேழாவது

# நவரத்நமாலை

பதினறுசீர்க்கழிநெடிலாசிரியச்சந்தவிருத்தம்

❀ ஒருமதி யன்ப ருளங்க வர்ந்தன வுலகம டங்கவ ளர்ந்த ளந்தன *
ஒருசடை யொன்றிய கங்கை தந்தன வுரகப டங்கள ரங்கு கொண்டன *
தரும முயர்ந்தி தென்ன நின்றன தருமணி ரந்தி சைந்து சென்றன *
சகடமு டைந்துக லங்க வென்றன தமர்கள ருந்தும ருந்தி தென்பன *
திருமகள் செய்யக ரங்க ளொன்றின திகழ்துள வுந்தும ணங்க மழ்ந்தன *
செழுமணிகொண்ட சிலம்பிலங்கினசிலை தனிலன்றொரணங்குமிழ்ந்தன *
அருமறை யந்தம மர்ந்த பண்பின வயன்முடி தன்னில மர்ந்து யர்ந்தன *
அருள்தரவெண்ணியயிந்தைவந்தன வடியவர்மெய்யர்மலர்ப்பதங்களே.

---

* "பற்பினமர்ந்த" என்றும் பாடம்.

இருபத்தெண்சீர்க்கழிநெடிலாசிரியச்சந்தவிருத்தம்

மகரம் வளரு மளவில் பெளவ மடைய வுற்ற லைத்தனை *
வடிவு கமட மெனவ மர்ந்து கிரித னைத்த ரித்தனை *
மலியு மசுர னுரமி டந்து வசுதை பேர்த்தெ டுத்தனை *
வலிகொ ளவுண னுடல்பி ளந்து மதலை மெய்க்கு தித்தனை *
பகரு முலக மடிய ளந்து தமர்க ளுக்க ளித்தனை *
பரசு முனிவன் வடிவு கொண்டு பலவ ரைத்து ணித்தனை *
பணிய விசைவில் திசைமு கன்தன் முடிகள் பத்த றுத்தனை *
படியு முருவில் வருபி லம்ப வசுர னைத்த கர்த்தனை *
நகரந் துவரை யெனவு கந்து வரைக ரத்தெ டுத்தனை *
நடமொ டியலும் பரியில் வந்து நலிவ றுக்க வுற்றனை *
நலியும் வினைகள் செகும ருந்தி னலமு றைந்த வெற்பினை *
நணுகு கருடநதிகி ளர்ந்த புனலு கப்பில் வைத்தனை *
அகர முதல வுயிர்கொள் மங்கை கணவ னுக்க ளித்தனை *
அடையும் விநதை சிறுவ னுய்ய வருள்கொ டுத்து யர்த்தினை *
அடியு மணையு மெனும நந்த னடிதொ ழுக்க ளித்தனை *
அவனி மருவு திருவ யிந்தை யடிய வர்க்கு மெய்யனே. 2

எழுசீர்க்கழிநெடிலாசிரியச்சந்தவிருத்தம்

புரமு யர்த்த வசுரர் கட்கொர் புறமு ரைத்த பொய்யினன் *
வரையெ டுத்து மழைத டுத்த மழையொ டொத்த மெய்யினன் *
திரைநி ரைத்த கடலெ ரித்த சிலைவளைத்த கையினன் *
அருள்கொ டுத்து வினைத விர்க்கு மடிய வர்க்கு மெய்யனே. 3

கலிவிருத்தம்

⁂ தேசொத்தா ரில்லை யெனுந்தெய்வ நாயகர் *
வாசக் குழல்மா மலராள் மணவாளர் *
வாசித் தொழுமன் மதனூர் மணற்றேப்பில் *
மாசிக் கடலாடி மகிழ்ந்து வருவரே. 4

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்

உருளுஞ் சகடமொன் றுதைத்தா யுலகேழு முண்டுமிழ்ந் தளந்தாய் *
பொருளு'மழனு மிறையாகப் பூண்டேன் அடிமை யினிமீண்டேன் *
இருளு மருளுந் தருமங்கா ளருளா ராழி சங்கேந்தி *
அருளுந் தெருளுந் தரவென்பா லடியோர் மெய்ய வந்தருளே. 5

எண்சீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்

வஞ்சனைசெய் பூதனையை மலியுஞ் சாட்டை
மல்லரையோர் மதக்களிற்றை வானோ ரஞ்சும் *
கஞ்சனைமுன் கடிந்தவனி பாரந் தீர்த்த
காவலனே கோவலனாய் நின்ற கோவே *
அஞ்சனமுங் காயாவு மனைய மேனி
யடியவர்க்கு மெய்யனே யயிந்தை வாழும் *
அஞ்சலெனு வருள் பொழியும் வள்ளலேநின்
வடிவழகு மறவாதார் பிறவா தாரே. 6

எழுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்

மையுமா கடலு மயிலுமா மழையு மணிகளுங் குவளையுங் கொண்ட
மெய்யனே * யடியோர்மெய்யனே விண்ணோர்ஈசனே நீசனேனடைந்தேன்*
கையுமா ழியுமாய்க் களிறுகாத் தவனே காலனார் தமரெனைக் கவராது *
ஐயனே வந்தன் றஞ்சலென் றருளென் னயிந்தைமா நகரமர்ந் தானே. 7

பதினான்குசீர்க்கழிநெடிலாசிரியச்சந்தவிருத்தம்

மஞ்சு லாவு சோலைசூ ழயிந்தை மன்னு மன்னு சீர்
வரையெ டுத்து நிரைய ளித்த மாசில் வாசு தேவனே *
செஞ்சொ லன்பர் சிந்தை கொண்டு தீதி லாத தூதனாய்த்
தேரு மூர்ந்து தேசு யர்ந்த செல்வ தெய்வ நாயகா *
வெஞ்சொ லாளர் கால தூ தர் வீசு பாசம் வந்தென்மேல்
விழுந் தழுந் தியா னயர்ந்து வீழ்வ தற்கு முன்னநீ *
அஞ்ச லஞ்ச லஞ்ச லென் றளிக்க வேண்டு மச்சுதா
வடிய வர்க்கு மருளி யக்கு மடிய வர்க்கு மெய்யனே. 8

கட்டளைக் கலித்துறை

⁂ பொருத்தம் பொருந்தலும் போகின்ற வற்றுடன் பொய்ம்மதிமே
விருத்தங் கலித்துறை மேவும ழன்மதம் பேறினியென் * [ல் *
திருத்த மனத்தினிற் சேரா வெமைத்தெய்வ நாயக * நின்
வருத்தம் பொருவரு ளால்மன் னடைக்கலங் கொண்டருளே. 9

எண்சீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்

⁂ அந்தமில்சீ ரயிந்தைநக ரமர்ந்த நாதன்
அடியிணைமே லடிபுரையா லம்ப தேத்திச் *
சிந்தைகவர் பிராகிருத நூறு கூறிச்
செந்தமிழ்மும் மணிக்கோவைச் செறியச் சேர்த்துப் *

பந்துகழ லம்மானை யூச லேசல்
பரவுநவ மணிமாலை யிவையுஞ் சொன்னேன் *
முந்தைமறை மொய்யவழி மொழிநீ யென்று
முகுந்தனருள் தந்தபயன் பெற்றே னனே. 10

அடிவரவு:—ஒருமதி, மகரம், புரமுயர்த்த, தேசு, உருளும், வஞ்சனை, மையும், மஞ்சுலாவு, பொருத்தம், அந்தமில்சீர். (ஆகாரத்)

மாயாவாத புஜங்க பங்க கருடாயநமஃ

தேசிகர் திருவடிகளே சரணம்

ஆக ப்ரபந்தம் 17-க்கு பாசுரம்-366.

**நவரத்நமாலை ஸம்பூர்ணம்.**

---

பதினெட்டாவது

# ஆஹார நியமம்

தனியன்கள்

ஆசிரியவிருத்தம்

சீராரும் வேதாந்த தேசிகர்கோன்
செழுமறையி னுட்பொருளைச் சிந்தைசெய்தே
ஆராய்ந்து வாழ்வுறவிப் புவியோர்கட்கு
அன்புடனே யாகார நீதிசொன்னான்
நேராரு மெதிராசர் தம்மருளா
லெதிர்ந்தவர்கள் சிங்கமென விங்குவந்தோன்
சீராரும் வேங்கடவன் தூப்புற்பிள்ளைச்
செழுந்திருத்தா ளிணைமலரென் சென்னிமேலே.

எண்சீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்

⁂ ஆகாரத் திருவகையா னன்றுந் தீதும்
அருமறைகொண் டெதிராச ரிவைமொ ழிந்தார்
ஆகாத வழிவிலக்கி யாக்குங் கண்ணன்
அனைத்துலகும் வாழவிது சாற்றி வைத்தான்
போகாது போக்குவிக்கு முனிவர் சொன்ன
பொய்யாத மொழிகளையும் பொருந்தக் கேண்மின்
ஆகாதென் றிவைதவிர்ந்தா மதுவே கொண்ட
வசகரனு மாகங்காத் தருள்பெற் றனே.

வாசலல்லா வாசலால் வந்த சோறும்
வரகுமுத லாகாதென் றுரைத்த சோறும்
வாயினின்றும் விழுமவைதான் பட்ட சோறும்
வாய்க்கொண்ட கவளத்தின் மிகுந்த சோறும்
தீயவர்கண் படுஞ்சோறுந் தீதற் சோறுஞ்
சீரையுரை தும்மலிவை பட்ட சோறும்
நாய்முதலா னவைபார்க்குந் தீண்டுஞ் சோறும்
நாள்தூய்தல் லாச்சோறு நண்ணுச் சோறே. 2

மனிசர்பசு முதலானோர் மோந்த சோறும்
மனிசர்தமி லாகாதார் தீண்டுஞ் சோறும்
இனிமையுட னுதரமில் லாதார் சோறும்
ஈப்புழுநூல் மயிருகிர்க ளிருக்குஞ் சோறும்
முனிவரெனுந் துறவறத்தோ ரீந்த சோறும்
முனிவர்தங்கள் பாத்திரத்தில் பட்ட சோறும்
மனிசரெலி குக்குடங்கள் காகம் பூனை
வாய்க்கொண்ட கறிசோறு மருவாச் சோறே. 3

அத்திகள்பே ரார்க்கிறலி வெண்கத் தாரி
யாலரசு நறுவிலிபூங் காயி லாரை
புத்திகொல்லி குறிஞ்சிதான்றி குசும்பை வேளை
புன்முருங்கை முருங்கைசுக முளரி புள்ளி
சிற்றவரை கொம்மடிகள் பண்ணை தொய்யால்
சீங்காடன் தேறனூவை பனைமை யூரன்
சுத்தியில்லா நிலத்திலவை கடம்பு காளான்
சுரைபீர்க்குச் சணந்தின்னார் சுருதி யோரே. 4

சிறுகீரை செவ்வகத்தி முருக்கி ரண்டுஞ்
சிறுவசளைப் பெருவசளை யம்ம ணந்தாள்
பறித்தொருவர் கொடாதிருக்கத் தானே சென்று
பாய்ந்தெடுத்துக் கொள்ளுமவை பகிராக் கூறுங்
குறித்தாலுந் தின்னொணுக் கைப்புந் துவர்ப்புங்
கூர்க்குமவை யழலுமவை கொடும்பு ளிப்பும்
கறிக்காகா விவையென்று கண்டு ரைத்தார்
கார்மேனி யருளாளர் கடகத் தாரே. 5

மாலமுது செய்யாமல் வந்த வெல்லாம்
வருவிருந்தில் வழங்காமல் வைத்த வெல்லாம்

காலமிது வன்றென்று கழித்த வெல்லாங்
கடையில்வருங் கறிமுதலாக் கழுவா வெல்லாம்
நூலிசையா வழிகளினல் வந்த வெல்லாம்
நுகராத துடன்பாகஞ் செய்த வெல்லாம்
சீலமில்லாச் சிறியோராக் கினவு நல்லோர்
சலமலங்கள் பட்டனவுந் தின்னர் தாமே. 6

தேவர்களுக் கிவையென்று வைத்த வெல்லாம்
சிவன்முதலாந் தேவர்களுக் கிட்ட வெல்லாம்
ஆவிமுத லானவற்றுக் காகா வெல்லா
மதுவிதுவென் றறியவரி தான வெல்லாம்
நாவிலிடு வதற்கரிதா யிருப்ப வெல்லா
நன்றென்று தம்முள்ள மிசையா வெல்லாம்
ஓவியநா ளோவாத பூவுங் காயும்
உத்தமர்க ளட்டுப்பு முக்வார் தாமே. 7

கிளிஞ்சல்முதல் சுட்டசுண் ணும்பு தானுங்
கிளர்புனலி லெழுங்குமிழி நுரைகள் தாமும்
விளைந்ததனின் முதல்மாலுக் கீயா வெல்லாம்
விளைந்தநில மறுகாம்பென் றெழுந்த வெல்லாம்
களைந்தமனத் தார்மற்றுங் கழித்த வெல்லாம்
கடியமுத னியமத்தார் கழித்த வெல்லாம்
தெளிந்தபுனற் றிருவேங்க டத்து மாறன்
றிருவாணை கடவாதார் தின்னர் தாமே. 8

மோரலது சாரங்கள் வாங்கிற் றெல்லா
முழுப்பகலில் விளங்கனியுந் தானந் தானும்
ஓரிரவி லெள்ளுடனே கூடிற் றெல்லாம்
யெள்ளுதனி லெண்ணெய்தயிர் தர்ப்ப ணங்கள்
ஓர்தவத்தை மந்திரத்தை யொழிப்ப வெல்லாம்
உண்ணுத நாள்களிலூ ணந்திப் போதூண்
நாரணனு ரடிபணியு நல்லோர் நாளு
நடுவிரவி லூணுமிவை யுண்ணர் தாமே. 9

குளிமுதலா னவைசெய்யா துண்ணு மூணுங்
கூட்டல்லாப் பந்திபிலூண் பிறர்கை யூணும்
நளிர்மதிதீ விளக்காக வுண்ணு மூணு
நள்ளிரவில் விளக்கின்றி யுண்ணு மூணும்

கிளிமொழியா ளுணுநிற்கக் கணவ னூணுங்
கீழோரை நோக்கூணு மிடக்கை யூணும்
ஒளிமறையோர் மற்றுமுக வாத வூணு
மொளியரங்க ரடிபணிவா ருகவார் தாமே. 10

எச்சில்தன்னில் வார்க்குநெய் யிருபா கங்க
ளிரும்பாலுங் கையாலு மிட்ட வெல்லாம்
பச்சையல்லாற் கடித்தகுறை பழைய வூசல்
பிறரகத்துப் பாகஞ்செய் தெடுத்த வன்னம்
நச்சினவை பழுத்தவைமண் ணுற்றந் தீது
நகத்தாலே விண்டவைதாங் காணு முப்பும்
பிச்சுளதா மவைகாடி பின்ன பாகம்
பிசின்கள் தன்னிற் சிவந்ததுவும் பிழையூ ணுமே. 11

தாதைநல்லா சிரியன்முதற் றமைய னெச்சில்
தரணிசுரர் சோமத்தி லருந்து மெச்சில்
மாதர்கட்குக் கணவனித மான வெச்சில்
மயிர்புழுநூல் விழுந்தாலும் புனித மாகும்
மாதவத்துக் கூவிளங்காய் முகவா சத்து
மாதுளங்காய் மரணம்வரிற் கழித்த வெல்லாம்
ஓதிவைத்த வுண்ணுநா ளுகந்த வெட்டும்
உளவென்றுங் கழித்தவற்றி னன்று மூணே. 12

மாகரும்பின் சாறுதயிர் பால்நெய் பாக்கு
வளைமிளகு தேனேலம் பனிநீ ராதி
ஆகரசந் தூய்தாகு மறியா வெல்லாம்
அறியாதார்க் கறியளவுந் தூயவாகும்
சாகரங்கள் தூயவாமூ வாக்கள் கூடிற்
சலமெல்லாங் கங்கையா முபரா கத்தில்
மாகரங்கள் பிணமுதலா மனைத்துங் கொண்டு
வரும்புனலுந் தூய்தாகும் வேகத் தாலே. 13

தீயாலே நீரொழிய வெந்த வெல்லாம்
தீயிடுத லொழித்திடவே பழுத்த வெல்லாம்
தீயாலு நீராலும் வெந்த வற்றில்
தேறவுலர் நெல்லுமுத லான வெல்லாம்
ஊசாத மாவடக மப்பஞ் சீடை
புரட்டிமுத லாமவற்றில் பழைய தேனும்

கூசாதே கொண்டிடுமின் புதிய தேலுங்
கொள்ளேல்மின் தன்னிரதங் குலைந்த தாலே. 14

தலைப்பயனும் விகாரங்கள் சாக டங்கள்
சக்கரங்கள் தனக்கடைத்த மருந்து தானும்
கலக்கமில்லா நன்னீரில் வைத்த சோறுங்
கறிமோர்நெய் பால்தயிர்கள் கலந்த சோறும்
விலக்கமிலா மாக்கன்னற் கோதூ மத்தால்
விளைவுறவாக்கியநல்வி காரந் தானும்
இலைக்கறிபோ லிவையனைத்தும் பழைய வேனு
மெந்நாளும் வைத்துண்ண விசைகின் றரே. 15

தயிர்தன்னில் விகாரங்கள் பூவிற் காயில்
பழத்தில்வருஞ் சாறுசல் தூய வாரும்
உயிரழியா மைக்குண்ணு வூச லுண்ணில்
உறக்கழுவி நெய்தேனிட் டுண்ண லாகும்
பயிர்மறையைப் போலெடுத்த பழைய வூசல்
பழிப்பிலதா நெய்யாலென் றுரைத்தான் சங்கன்
மயிர்முதலா னவைபின்னும் பட்ட தாகில்
மண்ணீர்மற் றுரைத்தவற்றால் வரங்க ளாமே. 16

ஒருகுளம்பி யிருகன்றி யொட்ட கப்பால்
உப்புடன்பால் மோருடன்பால் மாதர் தம்பால்
கருவுடைய வற்றின்பால் கன்றில் லாப்பால்
மறுகன்றாற் கறந்திடும்பால் திரிந்தி டும்பால்
திருமகளார் கணவனல்லாத் தெய்வத் தின்பேர்
சின்னமுடை யவற்றின்பால் செம்ம றிப்பால்
பரிவதிலந் தணர்விலைப்பால் செம்பி னிற்பால்
தீதாம்பா லிவையனைத்தும் பருகாப் பாலே. 17

கங்கையல்ல திரண்டாநாள் வைத்த நீருங்
கால்கழுவி மிகுநீருங் கலக்க நீரும்
தெங்கினுள தாய்த்தீயிற் காய்ந்த நீருஞ்
சிறுகுழிநீர் வழித்தண்ணீர்ப் பந்த னீரும்
சங்கையுடை நீர்வண்ணான் றுறையி னீருந்
தாரையினு லெச்சிலிது வென்ற நீரும்
சங்குகல மாக்கொண்டு பருகு நீருந்
தரையில்விழா மழைநீருந் தவிரு நீரே. 18

வெற்றிலைமுன் தின்றுதே தின்னும் பாக்கும்
வெற்றிலையி னடிநுனியு நடுவி லீர்க்கும்
வெற்றிலையும் பாக்குமுடன் கூட்டித் தின்னும்
விதவைக்கு முதன்முடிவாச் சிரமத் தார்க்கும்
சுற்றிலையுஞ் சுண்ணும் பிணிலையு மற்றுஞ்
சோகங்கொண் டிடுநாள்வெற் றிலையும் பாக்கும்
வெற்றிலைதின் னுநிற்கப் பருகு நீரும்
விதைபென வைத்ததது தினலும் விலக்கி னரே. 19

சாதிகுண மாச்சிரமந் தேசங் காலந்
தருமங்கள் நிமித்தங்கள் முதலா வோதும்
பேதமுத லாகவொரு திரவி யந்தான்
பிறந்துநலந் தீங்கிணையும் பெற்று நிற்கும்
பாதமிசை பிறந்தோர்க்குக் கபிலை யின்பால்
பருகிடலா காதென்று மறையோர் சொன்னர்
ஆதலினு லோதியுணர்ந் தவர்பா லெல்லாம்
அடிக்கடியுங் கேட்டயர்வு தீர்மி னீரே. 20

❀ கங்கிருளால் விடியாத வுலகுக் கெல்லாங்
கைவிளக்கா மிவையென்று கண்ணன் காட்டும்
பொங்குபுக ழாகமங்கள் தெரியச் சொன்ன
பொருளிவைநாம் புண்ணியர்பாற் கேட்டுச் சொன்னேம்
மங்குடலும் பொருளுமல்ல தறியா மாந்தர்
வலையுளகப் பட்டுவரம் பழியா தென்றும்
பங்கயமா துற்றவரு ளாளர் தம்பாற்
பத்திமிகு பவித்திரங்கள் பயின்மி னீரே. 21

மாயாவாத புஜங்க பங்க கருடாயநமஃ

தேசிகர் திருவடிகளே சரணம்

ஆக ப்ரபந்தம் 18-க்கு பாசுரம்-387.

ஆஹாரநியமம் ஸம்பூர்ணம்.

## பத்தொன்பதாவது

# ப்ரபந்தஸாரம்

### தனியன்கள்

எண்சீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்

ஆரணநான் கின்பொருள்க ளாழ்வார்க ளாய்ந்தடைவே
 யன்புடனே யம்புவியோ ரனைவருமீ டேறவென்று *
நாரணனார் தாள்களிலே நாலாயி ரந்தமிழால்
 நண்ணியுரை செய்தவற்றை நாடிவகை தொகைசெய்தாய் *
பூரணமா ஞானியர்சேர் பொங்குபுகழ்த் தூப்புல்வரும்
 புனிதனென்றும் பிள்ளையென்றும் புவியோர்புகழ் வேங்கடவா*
தாரணியோ ரிங்குகக்கச் சாற்றியநற் ப்ரபந்தசாரந்
 தனையுரைத்து வாழுமனந் தந்தருளா யென்றனுக்கே. 1

ஆதிமறை யோதிமகி ழுயக்கிரீவர் தம்மருளால்
 அன்புடனே தூப்புல்நக ரவதரித் திங்குவந்து *
வாதியரை வென்றுவந்து வண்புவிமே லெதிராசர்
 வாழ்வுறுநற் றரிசனத்தை வண்மையுட னேவளர்த்து *
நீதிநெறி தவறாமல் நிறுத்தியிடும் வேங்கடவா
 நேசமுட னாழ்வார்கள் நிலைகளெல் லாமுணர்ந்து *
சாதுசனம் வாழவென்று சாற்றியநற் ப்ரபந்தசாரந்
 தனையுரைத்து வாழுமனந் தந்தருளா யென்றனுக்கே. 2

எண்சீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்

⁂ ஆழ்வார்க ளவதரித்த நாளூர் திங்கள்
 அடைவுதிரு நாமங்க ளவர்தாஞ் செய்த *
வாழ்வான திருமொழிக ளவற்றுட் பாட்டின்
 வகையாகத் தொகையிலக்க மற்று மெல்லாம் *
வீழ்வாக மேதினிமேல் விளங்க நாளும்
 விரித்துரைக்குங் கருத்துடனே மிக்கோர் தங்கள் *
நீள்பாத நிரந்தரமுந் தொழுது வாழ்த்து
 நேசமுட னடியேன்றன் நெஞ்சு தானே, 1

அருள்மிகுத்த தொருவடிவாய்க் கச்சி தன்னில்
ஐப்பசிமா தத்திருவோ ணத்து நாளில் *
பொருள்மிகுத்த மறைவிளங்கப் புவியோ ருய்யப்
பொய்கைதனில் வந்துதித்த புனிதா முன்னாள் *
இருளதனிற் றண்கோவ லிடைக ழிச்சென்று
இருவருட னிற்கவுமா லிடைநெ ருக்கத் *
திருவிளக்கா மெனவையந் தகளி நூறுஞ்
செழும்பொருளை யெனக்கருள்செய் திருந்த நீயே. 2

கடன்மல்லைக் காவலனே பூத வேந்தே
காசினிமே லைப்பசியி லவிட்ட நாள்வந்து *
இடர்கடியுந் தண்கோவ லிடைக ழிச்சென்று
இணையில்லா மூவருமா யிசைந்தே நிற்க *
நடுவிலுமி லொருவருமன் றறியா வண்ணம்
நள்ளிருளில் மாலெருக்க நந்தா ஞானச்
சுடர்விளக்கேற் றிய * வன்பே தகளி யான
தொடைநூறு மெனக்கருள்செய் துலங்க நீயே. 3

மாமயிலைப் பதியதனில் துலாமா தத்தில்
வருஞ்சதயத் தவதரித்துக் கோவ லூரில் *
தூமுனிவ ரிருவருடன் துலங்க நின்று
துன்னியபே ரிருணீங்கச் சோதி தோன்றச் *
சேமமுட னெடுமாலைக் காணப் புக்குத்
திருக்கண்டே னெனவுரைத்த தேவே யுன்றன் *
பாமருவு தமிழ்மாலை நூறு பாட்டும்
பழவடியே னுக்கருள்செய் பரம நீயே. 4

தைம்மகத்தில் வருமழிசைப் பரனே மற்றைச்
சமயங்கள் பலதெரிந்து * மாயோ னல்லால்
தெய்வம்மற் றில்லையென வுரைத்த வேதச்
செழும்பொருள்நான் முகன்தொண்ணூற் ருறு பாட்டும் *
மெய்ம்மிகுத்த திருச்சந்த விருத்தப் பாடல்
விளங்கியநூற் றிருபதுந்தப் பாமல் மெய்யே *
வையகத்தில் மறவாம லுரைத்து வாழும்
வகையடியே னுக்கருள்செய் மகிழ்ந்து நீயே. 5

⁂ முன்னுரைத்த திருவிருத்த நூறு பாட்டும்
முறையில்வரு மாசிரிய மேழு பாட்டும் *
மன்னியநற் பொருட்பெரிய திருவந் தாதி
மறவாத படியெண்பத் தேழு பாட்டும் *
பின்னுரைத்த தோர்திருவாய் மொழியெப் போதும்
பிழையறவா யிரத்தொருநூற் றிரண்டு பாட்டும் *
இந்நிலத்தில் வைகாசி விசாகந் தன்னில்
எழிற்குருகை வருமாறு விரங்கு நீயே. 6

தேறியமா ஞானமுடன் திருக்கோ ளூரில்
சித்திரையில் சித்திரைநாள் வந்து தோன்றி *
ஆறியநல் லன்புடனே குருகூர் நம்பிக்
கனவரத மந்தரங்க வடிமை செய்து *
மாறனையல் லாலென்று மறந்துந் தேவு
மற்றறியே னெனுமதுர கவியே நீமுன்
கூறிய * கண் ணிநுண்சிறுத்தாம் பதனிற் பாட்டுக்
குலவுபதி னொன்றுமெனக் குதவு நீயே. 7

பொன்புரையும் வேற்குலசே கரனே மாசிப்
புனர்பூசத் தெழில்வஞ்சிக் களத்திற் றோன்றி *
அன்புடனே நம்பெருமாள் செம்பொற் கோயில்
அனைத்துலகின் பெருவாழ்வு மடியார் தங்கள் *
இன்பமிகு பெருங்குழுஉக் காண மண்மேல்
இருளிரிய வென்றெடுத்த விசையிற் சொன்ன *
நன்பொருள்சேர் திருமொழிநூற் றைந்து பாட்டு
நன்றாக வெனக்கருள்செய் நல்கி நீயே. 8

பேரணிந்த வில்லிபுத்தூ ரானி தன்னில்
பெருஞ்சோதி தனிற்றோன்றும் பெருமா னே * முன்
சீரணிந்த பாண்டியன்றன் னெஞ்சு தன்னில்
துயக்கறமால் பரத்துவத்தைத் திறமாச் செப்பி *
வாரணமேல் மதுரைவலம் வரவே வானின்
மால்கருட வாகனனுய்த் தோன்ற வாழ்த்தும் *
ஏரணிபல் லாண்டுமுதற் பாட்டு நானூற்
றெழுபத்தொன் றிரண்டுமெனக் குதவு நீயே. 9

⁂ வேயர்புகழ் வில்லிபுத்தூ ராடிப் பூரம்
மேன்மேலு மிகவிளங்க விட்டு சித்தன் *
தூயதிரு மகளாய்வந் தரங்க ரூர்க்குத்
துழாய்மாலை முடிசூடிக் கொடுத்த மாதே *
நேயமுடன் திருப்பாவைப் பாட்டா றைந்து
நீயுரைத்த தையொருதிங் கட்பா மாலை *
ஆயபுகழ் நூற்றுநாற் பத்து மூன்றும்
அன்புடனே யடியேனுக் கருள்செய் நீயே. 10

மன்னுமதிள் திருமண்டங் குடிதான் வாழ
மார்கழிமா தக்கேட்டை நாளில் வந்து *
துன்னுபுகழ்த் தொண்டரடிப் பொடியே நீமுன்
துழாய்மாலைப் பணியடிமை செய்து நாளும் *
தென்னரங்க மணவாளர்க் கன்பு மிக்குச்
செப்பியநற் றிருமாலை நாற்பத் தைந்தும் *
பன்னியநற் றிருப்பள்ளி யெழுச்சிப் பத்தும்
பழவடியே னுக்கருள்செய் பரிந்து நீயே. 11

உலகறிய மலிபுகழ்க்கார்த் திகைமா தத்தில்
உரோகிணிநா ளுறைந்தைவளம் பதியிற் றோன்றித் *
தலமளந்த தென்னரங்கர் பானு லோக
சாரங்க மாமுனிதோள் தனிலே வந்து *
பலமறையின் பொருளாற்பாண் பெருமா ளேநீ
பாதாதி கேசமதாய்ப் பாடித் தந்த *
சொலவமல னாதிபிரான் பத்துப் பாட்டுஞ்
சோராம லெனக்கருள்செய் துலங்க நீயே. 12

⁂ அறிவுதரும் பெரியதிரு மொழிதப் பாமல்
ஆயிரத்தோ டெண்பத்து நாலு பாட்டும் *
குறியதொரு தாண்டகநா லைந்தா றைந்துங்
குலாநெடுந்தாண் டகமெழுகூற் றிருக்கை யொன்றும் *
சிறியமடற் பாட்டுமுப்பத் தெட்டி ரண்டுஞ்
சீர்பெரிய மடறதனில்பாட் டெழுபத் தெட்டும் *
இறையவனே கார்த்திகையில் கார்த்தி கைநாள்
எழிற்குறையல் வருங்கலியா விரக்கு நீயே. 13

⁂ தேசமெலா முகந்திடவே பெரும்பூ தூரில்
சித்திரையி லாதிரைநாள் வந்து தோன்றிக் *
காசினிமேல் வாதியரை வென்ற ரங்கர்
கதியாக வாழ்ந்தருளு மெதிரா சா * முன்
பூசுரர்கோன் திருவரங்கத் தமுத னருள்
பொன்னடிமே லந்தாதி யாகப் போற்றிப் *
பேசியநற் கலித்துறைநூற் றெட்டுப் பாட்டும்
பிழையறவே யெனக்கருள்செய் பேணி நீயே. 14

எண்ணின்முத லாழ்வார்கள் மூன்று நூறு
மெழில்மழிசைப் பிரானிருநூற் றிருபத் தாறும் *
உண்மைமிகு மாறன்மறை யாயி ரத்தோடு
உற்றவிரு நூற்றுத்தொண் ணூறு மாறும் *
வண்மையுடை மதுரகவி பத்து மொன்றும்
வஞ்சியர்கோ னூற்றைந்தும் * பட்ட நாதன்
பண்ணியனூ னூற்றெழு பத்து மூன்றும்
பார்க்கோதை நூற்றேழு பத்து மூன்றே. 15

⁂ பத்தரடிப் பொடிபாட லைம்பத் தைந்தும்
பாணர்புகழ் பத்துடனே பரகா லன்சொல் *
அத்தனுயர் வேங்கடமாற் காயி ரத்தோ
டானவிரு நூற்றோரைம் பத்து மூன்றும் *
முத்திதரு மெதிராசர் பொன்ன டிக்கே
மொழிந்தவமு தர்பாடல் நூறு மெட்டும் *
எத்திசையும் வாழவிவை பாடி வைத்த
வென்பவைநா லாயிரமு மெங்கள் வாழ்வே. 16

⁂ வையகமெண் பொய்கைபூ தன்பே யாழ்வார்
மழிசையர்கோன் மகிழ்மாறன் மது ரகவி *
பொய்யில்புகழ்க் கோழியர்கோன் விட்டு சித்தன்
பூங்கோதை தொண்டரடிப் பொடிபா ணாழ்வார் *
ஐயனருட் கலியனெதி ராசர் தம்மோடு
ஆறிருவ ரோரொருவ ரவர்தாஞ் செய்த *
துய்யதமி ழிருபத்து நான்கிற் பாட்டின்
தொகைநாலா யிரமுமடி யோங்கள் வாழ்வே. 17

⁂ அந்தமிலா வாரணநா லாகி நின்ற
 வதன்கருத்தை யாழ்வார்க ளாய்ந்தெ டுத்துச் *
செந்தமிழா லருள்செய்த வகைதொ கையுஞ்
 சிந்தாம லுலகங்கள் வாழ வென்று *
சந்தமிகு * தமிழ்மறையோன் தூப்புல் தோன்றும்
 வேதாந்த குருமொழிந்த ப்ரபந்த சாரம் *
சிந்தையினு லனுதினமுஞ் சிந்திப் போர்க்குச்
 சேமமதாந் திருமால்தன் கருணை யாலே. 18

*அடிவரவு:—ஆழ்வார், அருள், கடல், மாமயிலை, தை, முன், தேறிய, பொன், பேரணி, வேயர், மன்னு, உலகறிய, அறிவுதரும், தேசமெல்லாம், எண்ணில், பத்தரடிப்பொடி, வையகம், அந்தமிலா.*

*மாயாவாத புஜங்க பங்க கருடாயநமஃ*

*தேசிகர் திருவடிகளே சரணம்*

*ஆக ப்ரபந்தம் 19-க்கு பாசுரம்-405.*

**ப்ரபந்தஸாரம் ஸம்பூர்ணம்.**

**தேசிகப்ரபந்தம் ஸம்பூர்ணம்.**

ஸ்ரீ

வேதாந்ததேசிகர் விஷயமாக

நயினாராசாரியர் அருளிச்செய்த

# பிள்ளையந்தாதி

## தனியன்

**திருமலை எம்பெருமானாரப்பன் அருளிச்செய்தது**

*கட்டளைக் கலித்துறை*

சீரார்தூப் புற்பிள்ளை யந்தாதி யென்று செழுந்தமிழால்
நேராக வேதாந்த தேசிகர் தாளிணைக் கீழ்மொழிந்தான்
ஏரார் மறைப்பொரு ளெல்லா மெடுத்திவ் வுலகுய்யவே
சீராகியவர தாரியன் பாதந் துணை நமக்கே.

---

*கட்டளைக் கலித்துறை*

⁂ மாமலர் மன்னிய மங்கை மகிழ்ந்துறை மார்பினன்றாள்
தூமலர் சூடிய தொல்லருள் மாறன் துணையடிக்கீழ்
வாழ்வை யுகக்கு மிராமா நுசமுனி வண்மைபோற்றும்
சீர்மைய னெங்கள்தூப் புல்பிள்ளை பாதமென் சென்னியதே. 1

சென்னி வணங்கச் சிறுபனி சோரவென் கண்ணிணைகள்
வெந்நர கங்களும் வீய வியன்கதி யின்பமேவத்
துன்னு புகழுடைத் தூப்புல் துரந்தரன் தூமலர்த்தாள்
மன்னிய நாள்களு மாகுங்கொல் மாநிலத் தீர்நமக்கே. 2

மாநிலத் தோதிய மாமறை மன்னிய நற்கலைகள்
ஆனவை செய்பு மரும்பொரு ளத்தனை யேயருளும்
தூநெறி காட்டு மிராமா நுசமுனித் தோத்திரஞ்செய்
ஊனமில் தூப்பு லய்யனோர் புகழன்றி யுய்வில்லையே. 3

உய்யும் வகையில்லை யுத்தர வேதியுள் வந்துதித்த
செய்யவண் மேவிய சீரரு ளாளரைச் சிந்தைசெய்யும்
மெய்யவ னெந்தை யிராமா நுசனருள் மேவிவாழும்
அய்ய னிலங்குதூப் புற்பிள்ளை யாய்ந்த பொருளன்றியே. 4

அன்றிவ் வுலகினை யாக்கி யரும்பொருள் நூல்விரித்து
நின்றுதன் னீள்புகழ் வேங்கட மாமலை மேவிப்பின்னும்
வென்றிப் புகழ்த்திரு வேங்கட நாத னெனுங்குருவாய்
நின்று நிகழ்ந்தமண் மேனின்ற நோய்கள் தவிர்த்தனனே. 5

வித்தகன் வேதியன் வேதாந்த தேசிக னெங்கள்தூப்புல்
மெய்த்தவ னுத்தமன் வேங்கட நாதன் வியன்கலைகள்
மொய்த்திடு நாவின் முழக்கொடு வாதியர் மூலமறக்
கற்றவ னென்றுரைத் தேன்கண்டி லேனென் கடுவினையே. 6

வினைகா ளுமக்கினி வேறோ ரிடந்தேட வேண்டுமெனைச்
சினமேவி முன்போல் சிதைக்கும் வகையிங் கரிதுகண்டீர்
எனிதி லிராமா நுசமுனி யின்னுரை சேருந்தூப்புல்
புனிதரென் புந்தி புகுந்து திகழ்ந்து பொருந்தினரே. 7

பொருந்திப் புவிதனில் பொய்வாழ்க்கை பூண்கின்ற பூரியர்காள்
இருந்து நரகி னிடர்கெட மாற்ற வறிகின்றிலீர்
பொருந்தும் பொருளொன்று கேளீர் பொங்குமிவ் விடர்க்கடற்கு
வருந்தாது தூப்புல் மாபூ ருடன்பாதம் வணங்குமினே. 8

வணக்க மொடுக்கம் வழக்க மொழுக்க மிரக்கஞ்சேரும்
இணக்க முறக்க மிழுக்கு மழுக்கு மிகந்துநிற்கும்
குணக்குல மோங்கு மிராமா நுசன்குணங் கூறுந்தூப்புல்
அணுக்கனைப் பிள்ளை தனையரணாக வடைபவர்க்கே. 9

அடைபவர் தீவினை மாற்றி யருள்தருந் தூப்புலய்யா
இடர்தரு மிப்பிற விக்கடல் தன்னி லமர்ந்தவென்னைக்
கடையறப் பாசங் கழற்றிநின் தாளிணை காணும்வண்ணம்
உடையவ னேயரு ளாயுணர்ந் தார்தங்கள் கற்பகமே. 10

கற்பக மேயென்று காசினி யோரைக் கதிக்கமாட்டேன்
வெற்பிடை யேநின்று வெந்தவத் தீயிலு மேவமாட்டேன்
பற்பல் கலைவல்ல பாவல னேபத்த ரேத்துந் தூப்புல்
அற்புத னேயரு ளாயடி யேனுக் கரும்பொருளே. 11

பொருளான தொன்றுமென் னில்பொருந் தாதது வன்றியந்தோ
மருளே மிகுத்து மறையவர் நல்வழி மாற்றிநின்றேன்

தெருளார் மறைமுடித் தேசிக னேயெங்கள் தூப்புற்றேவே
அருளா யினியெனக் குன்னரு ளேயன்றி யாறில்லையே. 12

ஆறுக வெண்ணு மருங்கரு மஞ்ஞானங் காதல்கொண்டு
வேறுக நிற்கும் விரகெனக் கில்லை விரத்தியில்லை
தேறுது திண்மதி சீரார் கதியிலுஞ் செம்பொன்மேனி
மாறுத தூப்புல்மா லேமற வேனினி நின்பதமே. 13

நின்பதந் தன்னிலு நேரே யெனக்கில்லை யன்புகண்டாய்
நின்பத மொன்றிய வன்பரி லுங்நேச மில்லையந்தோ
என்படி கண்டினி யென்பய னேதமில் தூப்புலெந்தாய்
உன்படி யேயரு ளாலுத வாயெனக் குன்னருளே. 14

உன்னரு ளன்றி யெனக்கொரு நற்றுணை யின்மையினுல்
என்னிரு வல்வினை நீயேவிலக்கி யிதங்கருதி
மன்னிய நற்றிரு மந்திர மோதும் பொருணிலையே
பொன்னரு ளாலரு ளாய்புகழ்த் தூப்புல் குலவிளக்கே. 15

விளக்காகி வேங்கட வெற்பினில் வாழும் விரைமலராள்
வளக்காதல் கொண்டுறை மார்பன் திறத்து முனதடியார்
துளக்காத வில்லவர் தங்கள் திறத்திலுந் தூய்மையெண்ணிக்
களக்காதல் செய்பு நிலைகடி யாய்தூப்புல் காவலனே. 16

⁂ காவல னெங்கள் கிடாம்பிக் குலபதி யப்புளார்தம்
தேமலர்ச் சேவடி சேர்ந்து பணிந்தவர் தம்மருளால்
நாவல ருந்தென் வடமொழி நற்பொருள் பெற்றநம்பிக்
காவல தூப்புல் குலத்தர சேயெம்மைக் காத்தருளே. 17

⁂ அருடரு மாரண தேசி கனேயெங்கள் றூப்புல்தேவே
வருகவி தார்க்கிக சிங்கமே வாதியர் வாழ்வறுத்தாய்
இருகையுங் கூப்பி யுரைக்குமிவ் விண்ணப்ப மொன்றுகேளாய்
உருவ வெனக்கரு ளாயெண்ணு முள்ளமுன் றொண்டரையே. 18

⁂ தொண்ட ருகக்குந் துணையடி வாழிநின் றூமுறுவல்
கொண்ட முகம்வாழி வாழி வியாக்கியா முத்திரைக்கை
வண்டிரு நாமமும் வாழி மணிவட முப்புரிநூல்
கொண்டசீர்த் தூப்புல் குலமணி யேவாழி நின்வடிவே. 19

⁂ வடிவழ கார்ந்த வண்தூப்புல் வள்ளல்மென் மலரடிமேல்
அடியவ ரோத வந்தாதி யிருபது மாய்ந்துரைத்தேன்

திடமுட னீதைத் தினந்தோறு மாதரித் தோதுமனபா
முடியுட னேர்படுந் தூப்புலம் மான்பத மாமலரே. 20

தேசிகர் திருவடிகளே சரணம்
நயினாராசாரியர் திருவடிகளே சரணம்.

---

**பிள்ளையந்தாதி ஸம்பூர்ணம்.**

---

# சாத்துமறை

ஸர்வதேஶதஶாகாலேஷ்வவ்யாஹதபராக்ரமா
ராமாநுஜார்யதிவ்யாஜ்ஞா வர்த்ததாமபிவர்த்ததாம்.

ராமாநுஜார்யதிவ்யாஜ்ஞா ப்ரதிவாஸரமுஜ்வலா
திகந்தவ்யாபிநீ பூயாத் ஸாஹிலோகஹிதைஷிணீ.

ஸ்ரீமந்ஸ்ரீரங்க ஸ்ரீயமநுபத்ரவா மநுதிநம்ஸம்வர்த்தய
ஸ்ரீமந்ஸ்ரீரங்க ஸ்ரீயமநுபத்ரவா மநுதிநம்ஸம்வர்த்தய.

நமோராமாநுஜார்யாய வேதாந்தார்த்தப்ரதாயினே
ஆத்ரேயபத்மநாப யசுதாயகுணசாலினே.

ராமாநுஜதயாபாத்ரம் ஜ்ஞாநவைராக்யபூஷணம்
ஸ்ரீமத்வேங்கடநாதார்யம் வந்தேவேதாந்ததேஶிகம்.

**சாத்துமறை ஸம்பூர்ணம்.**

---

# வாழிதிருநாமம்

நேரிசைவெண்பா

வாழி யிராமா நுசப்பிள்ளான் மாதகவால்
வாழு மணிநிக மாந்தகுரு—வாழியவன்
மாறன் மறையுமிரா மாநுசன் பாஷியமும்
தேறும் படியுரைக்குஞ் சீர். 1

எண்சீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்

வஞ்சப் பலசமய மாற்றவந்தோன் வாழியே
மன்னுபுகழ்ப் பூதூரான் மனமுகப்போன் வாழியே

கஞ்சத் திருமங்கை யுகக்கவந்தோன் வாழியே
கலியனுரை குடிகொண்ட கருத்துடையோன் வாழியே
செஞ்சொல் தமிழ்மறைகள் தெளிந்துரைப்போன் வாழியே
திருமலைமால் திருமணியாய்ச் சிறக்கவந்தோன் வாழியே
தஞ்சப் பரகதியைத் தந்தருள்வோன் வாழியே
செந்தமிழ்த்தூப் புல்திரு வேங்கடவன் வாழியே. 2

நேரிசைவெண்பா

நானிலமுந் தான்வாழ நான்மறைகள் தாம்வாழ
மாநகரின் மாறன் மறைவாழ—ஞானியர்கள்
சென்னியணி சேர்தூப்புல் வேதாந்த தேசிகரே
இன்னமொரு நூற்றாண் டிரும். 3

வாழித்திருநாமம் ஸம்பூர்ணம்.

---

# திருவோலக்கப்பாட்டு

வெண்பா

வாழி யணிதூப்புல் வருநிகமாந் தாசிரியன்
வாழியவன் பாதார விந்தமலர்—வாழியவன்
கோதிலாத் தாண்மலரைக் கொண்டாடிக் கொண்டிருக்கும்
தீதிலா நல்லோர் திரள். 1

திருவோலக்கப்பாட்டு ஸம்பூர்ணம்.

---

# திருநாள்பாட்டு

பன்னிருசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்

வாதா சனவர ரிவரென வருமா பாஷியம் வகைபெறுநாள்
வகுளா பரணப் பெருமாள் தமிழின் வாசி யறிந்திடுநாள்
பேதா பேதம் பிரமமெ னுவகை பிரமந்தெளி வித்திடுநாள்
பேச்சொன் றுக்குச் சததூ ஷணியைப் பேசிய தேசிகநாள்
தீதா கியபல மாயக் கலியைச் சிக்கென வென்றிடுநாள்
திக்கெட் டும்புகழ் ஸ்ரீபா ஷியத்தைத் தெளியவுரைத்திடுநாள்
ஓதா தோதும் வேதாந் தாரிய னுதயஞ் செய்திடுநாள்
உத்தம மானபு ரட்டா சித்திரு வோண மெனுநாளே. 1

இதுவுமது

செங்கம லத்தய னன்னவ ரென்றுபு கழ்ந்தும கிழ்ந்திடுநாள்
சீர்கொளிராமா நுசவெனு மந்திரம் பதிகளில் வாழ்ந்திடுநாள்
செங்கயல் வாளைகள் சேர்வயல் சூழ்ந்தவ ரங்கர் சிறந்திடுநாள்
சிந்துர வெற்பிடை சென்றுதி கழ்ந்துசி ரீபதி வாழ்ந்திடுநாள்
தெங்கொடு மாங்கனி தேன்சுனை வேங்கடத் தீசர்பி றந்திடுநாள்
சீர்மதி யாகம மௌலிதந் தேசிகர் பிறந்துவ ளர்ந்திடுநாள்
பங்கய மாமலர் மங்கைகுணங்களைத் தெளிய வெளியிடுநாள்
பார்திகழ் பாத்திர பதத்திரு வோண மெனுந்திரு நன்னாளே.

தேசிகர் திருவடிகளே சரணம்

---

## திருநாள்பாட்டு ஸம்பூர்ணம்.

---

தூப்புல்பிள்ளை பொன்னடி வாழ்க.

---

ஸ்ரீ

# தேசிகப்ரபந்த அட்டவணை



## தேசிகப்ரபந்தம்

ஸ்ரீ

ஸ்ரீராமஜெயம்

# ஸ்தோத்ர புஸ்தகங்கள்

| | ரூ | அ | பை |
|---|---|---|---|
| நாலாயிர திவ்ய பிரபந்தம் அழகிய ஆப்டோன் படங்களுடன் | 5 | 0 | 0 |
| தேசிகப்ரபந்தம் | 0 | 10 | 0 |
| திருவாராதனக்ரமம் | 0 | 3 | 0 |
| ஸந்தியாவந்தனம் (தமிழ்) | 0 | 1 | 6 |
| அமாவாசைதர்ப்பணம் (தமிழ்) | 0 | 1 | 6 |
| ஆதித்யஹ்ருதயம் | 0 | 3 | 0 |
| லக்ஷ்மி அஷ்டோத்தர ஸ்தோத்ரம் | 0 | 2 | 0 |
| முகுந்தமாலை | 0 | 6 | 0 |
| திருப்பாவை உரையுடன் | 0 | 4 | 0 |
| ஸங்க்ஷேப ராமாயணம் | 0 | 8 | 0 |
| அற்புத ராமாயணம் | 0 | 10 | 0 |
| எதிராஜவிம்சதி | 0 | 3 | 0 |
| லக்ஷ்மி ஸஹஸ்ரநாமம் | 0 | 8 | 0 |
| விஷ்ணு ஸஹஸ்ரநாமம் | 0 | 8 | 0 |
| குருபரம்பரை பன்னீராயிரப்படி | 3 | 0 | 0 |
| வடகலை நித்யாநுஸந்தானம் | 0 | 8 | 0 |

அ. இரங்கசாமிமுதலியார் ஸன்ஸ்

பூமகள்விலாச அச்சுக்கூடம்

24, தாண்டவராயப்பிள்ளைவீதி சென்னை.

வெளியாகிவிட்டது! ஸ்ரீ வெளியாகிவிட்டது!!

# அற்புத ராமாயணம்



இராமாயணம் என்னும் இதிகாசத்தை வான்மீகிமுனிவர் அருளிச்செய்தாரென்பது எல்லோரும் அறிந்த விஷயம். அது நூறுகோடி கிரந்தங்களென்பதும் அந்த கிரந்தங்கள் பிரம லோகத்திலிருக்கின்றனவென்பதும் ஆனந்தராமாயணம் முதலிய நூல்களால் வெளியாகின்ற நூறுகோடி கிரந்தங்களின் சாராம்ஸமானது 25000-கிரந்தங்களாகத் தொகுக்கப்பட்டு, 24000-கிரந்தங்கள் இப்பொழுது இப்புவியில் வழங்கிவரும் வான்மீகிராமாயணமென்னும் இதிகாசத்தில் பெறப்படுகின்றனவென்றும், அந்த இராமாயணம் ஏழுகாண்டங்களுள் கடைசிகாண்டமாகிய உத்தர காண்டத்தின் மிகுதியே இந்த அற்புதராமாயணம் என்றும் இதில் பாக்கியுள்ள ஆயிர கிரந்தங்கள் உள்ளனவென்றும் இந்த இதிகாசம் பேசுகின்றது.

இந்நூலில் இதன்பெயருக்கு ஏற்றபடி விஷயங்களும் பெறப்படுகின்றன. இதில் முக்கியமாய் அவரித்துள்ளவைகள் சீதாபிராட்டியின் ஜனனமும், 24000-கிரந்தங்களுட் சொல்லப்படாத சீதா தேவியின் மகிமையுமேயாம். இதிற் காணப்படும் ஸஹஸ்ரமுக ராவணனுடைய சரிதம் படிப்பவர் மனதிற்குப் பயமும் வியப்பும் உண்டாக்கக்கூடியதாக விருக்கும்.

இவைகளன்றி இதில் நாம் முக்கியமாய் கவனிக்கத்தக்கது பிரமமே ஸ்ரீராமன் என்றும், மூலப்ரக்ருதியே சீதை என்றும் விளக்கியிருக்கும் விஷயமாகும். இந்த அற்புதராமாயணத்தில் 1353-கிரந்தங்கள் அடங்கியிருக்கின்றன. அந்தக் கிரந்தங்கள் 27-சருக்கங்களாக வகுக்கப்பட்டிருக்கின்றன.

நமது தமிழ்நாட்டு ஸ்திரீ புருஷர்கள் யாவரும் படிக்குமாறு கிரந்த சுலோகங்களை யொட்டியே இப்புத்தகம் எளிய தமிழில் பிரம்மஸ்ரீ, வாகவி திரு அ. சுப்பிரமணி பாரதியார் அவர்கள் உதவியைக்கொண்டு எஸ். ராஜாசாஸ்திரியார் அவர்களால் மொழி பெயர்க்கப்பட்டு சுத்தப்பிரதியாய் பெரிய எழுத்தில் அச்சிட்டுத் தயாராயிருக்கின்றது.

விலை அணா 10

விலாசம்:

**அ. இரங்கசாமி முதலியார் ஸன்ஸ்,**

24, தாண்டவராயப்பிள்ளைவீதி சென்னை.